உ

திருச்சிற்றம்பலகுரவே நம:

# "சித்தாந்த ஞானரத்நாவலி"

## "பதிபசுபாசத்தொகையுரை"

இவை

திருநெல்வேலிக்கஸ்பா தெற்குப்புதுத்தெரு ஸ்ரீமத்

S. பால்வண்ணமுதலியாரவர்களால்

இயற்றி

மதுரை நான்காந்தமிழ்ச்சங்கத்து

ஐந்தாவது வருஷோற்சவகாலத்தில்

அரங்கேற்றப்பெற்று


மதுரை

மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களால்

விவேகபாநுப்பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றன.

பராபவஞு கார்த்திகைமீ

1906




இதன் விலை] [அணா 6.

# சாற்றுக்கவிகள்.



சென்னை பிரஸிடென்ஸிக் காலேஜ் மகா மகோவுபாத்தியாயர்
ப்ருஹ்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களியற்றியது.



வெண்பா.

துன்னுபுகழ்ப் பாண்டித் துரைவே டமிழ்ச்சங்கத்
தின்னுமுரை யென்னவரங் கேற்றினன்—மன்னுவள
மானநெல்லைப் பால்வண்ண வண்ணலன்பிற் சித்தாந்த
ஞானரத்தி னவளியை நன்கு.



சேற்றூர்ச் சம்ஸ்தான வித்துவானும் மதுரைத் தமிழ்ச்சங்கத்து
நூற்பரிசோதகருமாகிய ஸ்ரீமத்
மு. ரா. அருணாசலக்கவிராயரவர்களியற்றியவை.



முத்தியெனு மேல்விட்டை யெளிதிலடை வார்க்கிதுவே
முதற்சோ பான
மெத்திசையி லெங்நெறியிற் சென்றாலு மென்னநெல்லை
யினில்வாழ் சைவ
வித்தவனென் றேதுபால் வண்ணமன்னன் பருத்தியிலே
விளைவ தான
சித்திதரு சித்தாந்த ஞானரத்தி னவளிநூல்
சிறப்பச் செய்து. (க)

நெய்தனில மதிற்பயிலு முகவையிற்பல் கலைகளெலா
நிரம்பப் பெற்று
மெய்தழையுக் கிரபாண்டித் துரைமதுரை மாநகரில்
வியந்தன் பாகச்

செய்தநான் காஞ்சசங்கப் பாவொடுசே ரக்கொணர்ந்து
திகழ்பா வாணர்
கைதனிலேற் றுக்களிப்பப் பகர்ந்தளித்தா னியாமுநோர்
கண்டா மன்றே. (உ)

---

மதுரை விவேகபாநுப்பத்திராதிபர் ஸ்ரீமத்

## மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களியற்றியவை.

———*———

மாநலச்சிந் தாமணியா தியபலவு மண்ணினனி
வழங்கி னேன்வே
டானெனச்சொல் சாமிநா தப்பெரியோன் முதன்மதுரைச்
சங்கத் தார்முன்
றேனனைய பதினன்கு சாத்திரவா ரிதிபடிந்து
திகழ்சித் தாந்த
ஞானரத்தி னவளியைப் பால்வண்ண முகிறருமிந்
நாணன் னுளே. (க)

### வெண்பா.

பதிபசுபா சத்தொகையாப் பன்னும் விழிக்குக்
கதிரொளிபோன் றேருரையைக் கண்டான்—றுதிவிதிமுன்
னூல்வண்ண முற்றுமுணர் நுண்ணுணர்வான் மெய்ப்புகழ்சேர்
பால்வண்ண நாமமெய்யன் பன். (உ)





உ

திருச்சிற்றம்பலம்.

# சித்தாந்த ஞானரத்நாவளி.

## முகவுரை.

"நற்குஞ்சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்"

1. அநாதிமுத்த பதியாகிய சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்ட வேதசிவாகமங்கள் முதல் நூல்களாம். அவற்றுள் வேதம் பொதுவும் ஆகமம் சிறப்புமாம். உபநிடதங்கள் வேதாந்தமென்று அழைக்கப்பெறும். ஆகமங்களின் அந்தம் சித்தாந்தம் என்று அழைக்கப்பெறும். சித்தாந்தமென்பது முடிந்த முடிவு என்று பொருள்படும்.

2. வேதம் சூத்திரங்களாகவும், ஆகமம் அச்சூத்திரங்களின் விளக்கமாகவும் இருத்தல்பற்றி அரிய பெரிய உண்மைகளைச் சித்தாந்தத்தில் யாவரும் எளிதில் அறிந்து உய்தல் கூடும்.

3. சிவாகமங்களிற் கூறப்பெறும் சித்தாந்த உண்மைகள் வடமொழியிலிருப்பதால், தமிழுலகம் உய்யும்பொருட்டுச் சந்தான குரவர்கள் பலரும் தென்மொழியில் பல நூல்கள் இயற்றுவாராயினர். அந்நூல்கள் முதல் நூலாகிய சிவஞானபோதம் வழிநூலாகிய சிவஞானசித்தியார் சார்புநூல்களாகிய சிவப்பிரகாசம், தத்துவவிளக்கம், ஞானமிர்தம், துகளறுபோதம் இவைபோன்ற பலவுமாம்.

4. இம்மூவகைப்பட்ட நூல்கள் பலவற்றிற்கும் **சித்தாந்த சாத்திரம்** என்று பெயர். இச்சாத்திரங்கள் மிகக்கற்றோர்க்கே புலப்படுவனவாயிருத்தலால் மற்றையரும் எளிதில் அறியுமாறு சில முக்கிய விஷயங்களைமாத்திரம் உரைநடையிலும் ஆன்றோர் பலர்கள் எழுதுவாராயினர். அவைகள் கட்டளைகள் எனப்பெயர்பெற்று நிலவுகின்

றன. இக்கட்டளைகளிற்பயில்வோர் சித்தாந்த உண்மையைப் பிண்டமாக அறிதல் கூடுமே யன்றி வேறன்று.

5. மேற்கூறிய பிண்டமாயுள்ள சாத்திரக்கருத்தை வகைப்படுத்தி யாவருக்கும் தெற்றென விளக்குமாறு எழுதல் வேண்டுமென்று பலர் என்னிடங் கூறுவாராயினர்.

6. அவர்கள் அவ்வாறு கூறினும் முன்னமே பலரும் பல திறப்பட எழுதிவைத்ததினும் புதிதாய் யான் எழுதுவது என்னெனக் கருதிக் காலந் தாழ்க்கலாயினேன். ஆயினும், ஆன்றோர் அருளிச்செய்த நூல்களுள் சித்தாந்த தத்துவலக்ஷணம், திரிபதார்த்தசிந்தனை, சற்குருதேசிகன் தரிசனம், பூப்பிள்ளை அட்டவணை முதலிய வசன நூல்களையும் எனது பரமகுருவாகிய சிற்றம்பலநாடிகளால் அருளிச்செய்யப்பட்ட துகளறுபோத மூலத்தையும், பதி பசு பாசத் தொகை யென்னும் அரிய சிறிய நூலிற்கு எனது சிற்றறிவிற்கு எட்டியவாறு எழுதிய ஓர் விரிவுரையையும் வெளிப்படுத்தலாயினேன், ஆங்கில மொழியிலும் சிலதுண்டுப் பத்திரங்களும் சிறுபுத்தகங்களும் அப்போதைக்கப்போது என்னால் பிரசுரிக்கப்பெற்றன.

7. இவ்வாறெல்லாஞ் செய்தும் சித்தாந்த உண்மைஞானத்தில் எனக்குரிய வேட்கை மிகுதியும் உந்தி எழாநின்றமையாலும் எனது நண்பர்கள் பலர் தற்காலத்திற்கு ஏற்றவிதமாய் வசன நூலொன்று எழுதி வெளியிடல்வேண்டுமென்று மீண்டும் பன்முறை வற்புறுத்திக் கூறினமையாலுந் திருவருட்செயலும் அங்ஙனம் ஒத்து நிகழ்ந்தமையாலும் அவ்வாறு எழுதிமுடித்தல் மிகஅவசியந்தானென்று என் மனமே மீண்டு மீண்டுந் தூண்டாநின்றது.

8. இத்தகைய நிலைமையிலுள்ள தமியேன் பரமஞானியாகிய ராமகிருஷ்ண பரமஹம்ஸ சுவாமிகளின் திவ்விய மொழிகளடங்கிய ஒரு அரியநூலைக்கண்டு, அவ்வாறு ஒன்று தமியேனும் எழுதல் சாலுமோ? என்று எண்ணிக்கொண்டிருந்தேன்.

9. அவ்வாறு எண்ணிக்கொண்டிருக்குங்கால் மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் அக்கிராசனாதிபதியாயும் என்மாட்டுமிக்கு உரிமைபாராட்

டிக்கொண்டிருப்பவர்களுமான **ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத்தேவர் அவர்கள்** சங்கத்தின் சென்ற ஐந்தாவது மஹோற்சவத்துக்குத் தாங்கள் யாதானும் ஒரு வியாசம் எழுதி வாசித்தல் வேண்டுமென்று எழுதினார்கள். அவ்வெழுத்தைக்கண்டதும் முன்னமே சித்தாந்த வசனமொன்று எழுதுதற்காக இயைந்துநின்ற என் மனம் தனக்கோர் சமயம் வாய்த்ததென்று நினைத்து என்னைத்தன் வழியீர்த்தது.

10. அருட்பிரேரணையால் இழுக்கும் அம்மனத்தின்வழியே வழியாகக்கொண்டு **சிந்தாந்தஞான ரத்நாவளி** யென்னும் இச்சிறியநூலை மேற்குறிப்பிட்ட உற்சவகாலத்தில் வாசிக்குமாறு மிக விரைவாக எழுதிமுடித்தேன். அங்ஙனம் விரைந்து எழுதினமையால் சிற்சில வழுக்கள் சொல்வகையானும் பொருள்வகையானும் இருக்கினும் இருக்கலாம். அவைகளை மிகக் கற்றோர் கவனியாது விடுப்பார்களென்னுந் துணிவால் எழுதாவெழுத்தில் இயைவிக்க முயன்றேன். மேலும் இந்நாலினைப் புதுக்கியும் கூட்டியும் பலபதிப்பிற் பதிப்பிக்க வேண்டுமென்பது எனது விருப்பம்.

11. சித்தாந்த உண்மை அறிவாகிய இரத்தினங்களை வரிசையாக வைத்துக்கூறப்பட்ட நூலாதலினால் இந்நாலுக்குச் **சித்தாந்த ஞான ரத்நாவளி** என்னும் பெயர்புனைந்துரைக்கப்பட்டது. இரத்தினங்கள் நவந்தருபேதமுடையனவாதலால் இந்நூல் **பிரமாணவியல்** முதல் **முத்தியியல்** வரை ஒன்பது இயல்களாக வரிசைப்படுத்தி இயற்றப்பட்டமை காண்க.

அவை வருமாறு:—

12. 1-வது பிரமாணவியல்.—உலகத்துப்பொருள்களை அளத்தற்கு அளவைகள் உள்ளனபோல் திரிபதார்த்த உண்மைகளை அளத்தற்கும் **காண்டல், கருதல், உரை** என்னும் மூன்று முக்கிய பிரமாணங்கள் உண்டென்று கூறுவதோடு அவைகளின் பிரிவுகளையும் விளக்கிக் கூறும்.

13. 2-வது தத்துவவியல்.—இது உண்மைப்பொருள்களாகிய 36 தத்துவங்களையும் அவைகளினின்றும் தோன்றிய தாத்விகங்களை

யுங் கடினபதவிளக்கங்களையுந் தொகுத்துக்கூறித் தத்துவங்கள் தோன்றி ஒடுங்கும் முறைகளையும் பஞ்சகலைகளில் ஆறத்துவாக்கள் அடங்கு முறைமையையும் காட்டாநிற்கும்.

14- 3-வது பொதுவியல்.—இது முன்னைய இருவியல்கள் கூறும் இயல்பினையறிதற்கும், பின்னைய பதியியல் முதலிய இயல்களிற் கூறப்பட்டவைகளை யறிதற்கும் இன்றியமையாத சில பொது நியாயங்களைக் கூறும்.

15. 4-வது பதியியல்.—உலகிற்கோர் கடவுள் வேண்டுமென்றும், அவன் ஒருவனே யென்றும் அவன் தன்மைகள் இன்னவின்னவை யென்றும், முதல்துணையென்னுங் காரணங்களைத்தமக்கு உபகரணங்களாக வைத்துக்கொண்டு இவ்வுலகைச் சிருஷ்டிப்பானென்றும், பஞ்சகர்த்தாக்களைக்கொண்டு பஞ்சகிருத்தியமும் அவனே யியற்றுவானென்றும், அவ்வாறு இயற்றினும் அவன் நிர்விகாரி யென்றும், அவன் மேலான சங்காரத்தொழிலைத் தன்மாட்டுடையவனாதலினால் அவனே முழுமுதற்கடவுளென்றும், அவனிடத்திற் பிரபஞ்சங்கள் யாவும் ஒடுங்குமென்றும், மீண்டும் அவனாலேயே அவைகள் புனருற்பவ மெய்துமென்றும், அவன்அறிவு இச்சை செயல்கள் உடையவனென்றும், அவன் ஒருநியதிபற்றியே சிற்றறிவு சிறுதொழில்களுடைய ஆன்மாக்களை யியக்குவானென்றும், அவன் அன்பர் வேண்டியாங்கு உபகரிப்பானென்றும், அவன் ஐவகைச் சத்திகளைக்கொண்டு யாவும் நடத்துகின்றானென்றும், அவ்வாறு நடத்தினாலுஞ் சூரியனைப் போல் அவைகளில் தாக்கற்று நிற்பானென்றும், அவன் சத்தியின் தன்மைகள் இன்னவையென்றும், அவன் ஆன்மாக்களுக்கு உணர்த்து முறை இன்னதென்றும், அச்சத்திகள் செல்லும் வழி இன்னதென்றும், அச்சத்திபேதத்தால் இறைவனும் பலபேதப்பட்டவன்போலத் தோற்றப்படுவரென்றும், அவனது திருமேனி இன்னதென்றும் அறியக்கூடிய பல வாக்கியங்களைத் தொகுத்துக் கூறும்.

16. 5-வது பசுவியல்.—ஆன்மாக்கள் அநாதிநித்தியமாய் ஆணவ சம்பந்தமுடையனவென்றும், வியாபகமுடையனவென்றும், இருவினையினால் மாயாதேகமெடுத்து இறத்தல் பிறத்தல்களை யடைவனவென்றும், சார்ந்ததன்வண்ணமா யிருப்பனவென்றும், பஞ்சாவஸ்

தையி னுட்படுவனவென்றும், அறிவு இச்சை செயல் உடையனவெ ன்றும், சுதந்தரகீனத்துவமுடையனவென்றும், சதசத்துக்களென் றும், எண்ணமுடியாதவைகளென்றும், சிற்றறிவு சிறுதொழில் உடையனவென்றும், மும்பாசபந்தமுடையனவென்றும்,கேவலம் சக லம், சுத்தம் என்னும் மூன்று நிலைகளை உடையவைகளென்றும், சக லர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என முத்திறப்படுவனவென்றும், பிரமாதி தேவர்களும் ஆன்மவர்க்கத்துட்படுவார்களென்றும் இன்னும் சில குறிப்புக்களும் கூறுநிற்கும்.

71. 6-வது பாசவியல்—ஆணவம், கன்மம் (ஆகாமியம், சஞ்சி தம், பிராரத்துவம்) ஆதிதெய்வீகம், ஆதிபௌதிகம், ஆதிஆன்மியம்) சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி ஆகிய இவைகளின் தன்மை களையும், திரோதானமலத்து இறைவனது மறைத்தற் சத்தியையு மிக வியந்து கூறுநிற்கும்.

18. 7வ-து சாதனவியல்—கற்றல் கேட்டலுடையார் கைக் கொள்ளும் உண்மைச்சமயம் **சித்தாந்தசைவம்** ஒன்றேயென்றும், நான்கு ஆச்சிரமிகளும் அவ்வதீத சமயக்கொள்கைகளையே பின்பற் றிச் செல்லவேண்டுமென்றும், சற்குருவின் திருவருளால் மும்பா சம்நீங்கும் வகையையும், சமயவிசேட நிருவாண தீக்ஷைகளையும், சரி யையோகத்தால் சத்திநிபாதம் உண்டாகுந்தன்மையையும், கலாசோ தனையையும். ஆன்மாக்கள் அடையும் பதவிகளையும், விக்கிரகாரதன ம் மிக அவசியம் வேண்டுமென்பதையும், பஞ்சாக்கரத்தின் மேன் மையையும், பூஜா சமஸ்காரங்களையும், அகப்பத்தி புறப்பத்தி என்ப வைகளின் பாகுபாடுகளையும், தியானவழிகளையும், தியானிப்பாரடை யுங் கதிகளையுஞ் சீவன்முத்தன் நிலைகளையும்,தசகாரியங்களையும், முப் பது அவதரங்களையும் தசகாரியத்துள் அடக்குமுறைமையையும்,சரி யையிற் சரியை முதல் ஞானத்தில் ஞானம் வரை உள்ளபதினாறுபடி களையும் பிறவற்றையும், விதந்தெடுத்தோதும்.

19. 8-வது அநுபவவியல்—மேற்கூறிய சாதனங்களைப் பயிறு லாற் பயில்வோர்மாட்டு நிகழும் அநுபவக்காட்சிகளைச் சுருக்கிக் கூறுநிற்கும்.

20. 9-வது முத்தியியல்—பழிசேர் முத்திகளை யெல்லாம் விடுத்துப் பரம முத்தியாகிய சுத்தாத்துவைத முத்திலட்சணத்தைக் கூறுநிற்கும்.

இங்ஙனங் கூறப்பெற்ற ஒன்பது இயல்களினுள்ள வாக்கியங்களின் பூரண உண்மைகள் பாலர்களுக்கும் ஸ்திரீகளுக்குங்கூடப்பயன் படுமாறு இலகுவசனங்களால் எழுதப்பட்டுள்ளன. இந்த நூலினுள் குறிப்பாகக் காட்டப்பட்டவைகளைச் சிவஞான சித்தியார் முதலிய விரிவு நூல்களிற் கண்டுணர்க. இந்நூல் நான்காந் தமிழ்ச்சங்கத்தின் 5-வது மகோற்சவகாலத்தில் அரங்கேற்றுங்கால் அக்கிராசனம்வகித்து அதன் நுண்பொருள்களைப் பலவாறு விதந்தெடுத்தோதி எனக்கு ஊக்கங்காட்டிய **மஹாமஹோபாத்தியாயர் ப்ருமஸ்ரீ உ.வே. சாமிநாத ஐயரவர்களுக்கும்,** சங்கத்தின் அரங்கேற்றும் அவைக்களத்திற் போந்து இந்நூலினைக்கேட்டு மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்ட வித்வசிகாமணிகளுக்கும், இந்நூலின் அருமையை அறிந்து வியந்து கூறிய **ஸ்ரீமான் பொ. பாண்டித்துரைத் தேவரவர்களுக்கும்,** என்னைத்தூண்டி இந்நூலினை எழுதச்செய்த எனதுநண்பர் மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர் **ஸ்ரீமத் மு. ரா. அருணசலக்கவிராயர் அவர்களுக்கும்** இந்நூலினை அச்சிற்பதிப்பிக்கமுன்வந்தஎனதுநண்பர் மதுரை விவேகபாநுப்பத்திராதிபர் **ஸ்ரீமத் மு. ரா. கந்தசாமிக்கவிராயர் அவர்களுக்கும்** சதா நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். திருவருள்முன்னிற்க.

முற்றிற்று.

---

இங்ஙனம்

**S. பால்வண்ண முதலியார்,**

தெற்குப்புதுத்தெரு,

திருநெல்வேலி.

உ

சிவமயம்

# சித்தாந்தஞானரத்நாவளி.

——:*:——

## நூல்

## முதலாவது: பிரமாண வியல்.

1. அளவைஎன்பது. ஆன்ம *சிற்சத்தியாகிய அறிகருவியாலளத்தல்.
2. காண்டல்—இந்திரியங்களுக்கு விஷயமாதல். இதுதான் பிரத்தியட்சப் பிரமாணம்.
3. கருதல்—கண்டபுகையினுலே காணுத நெருப்பை யறிதல். இது அநுமானப்பிரமாணம்.
4. உரை—மகாமேரு வடக்கே யுண்டென்றறிதல். இது ஆகமப்பிபிரமாணம்.
5. அபாவம்—இன்மை. முயலுக்குக் கொம்பில்லை யென்றறிதல்
6. பொருள்—வெண்டாமரை என்னவே செந்தாமரை யுண்டென்று அறிதல்.
7. ஒப்பு—படிகம்போலிருப்பர். சிவன் என்பது.
8. ஒழிவு—இருவருள் இவன் கள்ளன் என்றால் அவன் கள்ளனல்லனென்றறிதல்.
9. உண்மை—நெருப்பு என்றால் அதிலே சூடு உண்டென்றறிதல்.
10. ஐதிகம்—இவ்வாலமரத்திலே பேயுண்டென்று பரம்பரையாகக் கேட்டறிதல்.
11. இயல்பு—ஒருசொல்லுக்குப் பலபொருளிருந்தால் வினை சார்பு இனம் இடங்களினுலே ஒரு பொருளைத்திடமாக அறிதல்.
உ-ம். மாபூத்தது ஈண்டுமா என்பது பூத்தது என்றதால் மரத்தினைக்குறித்து நின்றது.
12. காட்சி—பலவிதமாம்.
    1. ஐயக்காட்சி—பாம்போ பழுதையோ என்றைய முறுதல்.

*சிற்சத்தி-அறிவு.

2. திரிவுக்காட்சி—பாம்பைப் பழுதை யெனக்காண்டல்.

3. விகற்பக்காட்சி—ஐந்துகுணத்துடனே காண்பது, ஐந்து குணங்களாவன—பெயர் சாதி குணம் தொழில் பொருள் என்பன.

4. நிர்விகற்பக்காட்சி—ஒரு குடத்தைக் குடமெனமாத்திரங் காண்டல்.

5. வாயிற்காட்சி—ஞானேந்திரியங்களாலே அறிதல். இங்கு ஐந்துறுப்புவேண்டும்; அவை ஆன்மா, அறிவு, இந்திரியம், பிரகாசம், தன்மாத்திரை என்பன.

6. மானதக்காட்சி—இந்திரியங்களினாலே தன் மாத்திரை அறிந்துவிட்டதை மனத்திலே நினைத்தல்.

7. தன்வேதனைக்காட்சி—கலாதிகள் ஏழினாலே ஆன்மாவினுடைய அறிவு இன்பதுன்பங்களிலழுந்தி யநுபவித்தல்.

8. யோகக்காட்சி—தியானசமாதியிலே யிருந்து மூன்று மலங்களுடைய பலத்தைக்கெடுத்து நானாதேசங்களிலுள்ள காரியங்களையும் மூன்றுகாலங்களிலுள்ள காரியங்களையும்இருந்த இடத்திலேயே அறிதல்.

13. அநுமானம்—இரண்டு வகைப்படும்; தானறிகிறது ஒன்று: பிறருக் கறிவிக்கிறதொன்று; தன் கருத்துணரும்படியாய் நின்ற காரணம் எதுவோ அதனை விளக்கிடு மறிவே தன்பொருட்டனுமானமாம்.

14. காணாத நெருப்பைப் பிறர்க்கு அறிவித்தற்கு ஐந்து உறுப்புகள் வேண்டும்—அவையாவன.

1. மலையிலே நெருப்புண்டு இது பிரதிஞை.

2. புகைகண்டபடியால். இது ஏது (கருவி)

3. அடுக்களையிற்புகையும் நெருப்பும் நாள்தோறும், நாள்தோறும்கண்டு கண்டுபழகினதுபோல் இது திருட்டாந்தம்(உவமை)

4. அடுக்களையைப்போல் மலையில் நெருப்புண்டு. என்றல்(உபநயம்)உதாரணத்தோடு சார்த்திக்கூறல்.

5. மேற்கூறிய நான்கும் மெய்யேயல்லாமல் ஒன்றும் பொய்யில்லை. இது நிகமனம். (நிட்சயமானமுடிவு)

15. அநுபலத்தி—கண்ணிலே காணாத ஏது. சரீரத்தில் குளிர்ச்சியைக்கண்டு பனிக்காலமென்றும், வேர்வையைக்கண்டு கோடைகாலமென்றும் அறிதல்.

அந்நுவயம்—புகையால் அனல்உண்டு அடுக்களைபோலென்றல் (உடன்பாடு)

வெதிரேகம்—(எதிர்மறை)அனல் இல்லாவிடத்துப் புகையில்லையென மறுதலைபற்றி, தாமரை ஓடையை உவமை கூறுஞ் சொல்.

16. ஆகமப்பிரமாணம்—அநுமானத்தி லடங்கிடாப் பொருளைக்காட்டுவது. உ-ம். மகாமேரு, தெய்வலோகம் நரகம் உண்டென்று தெரிதல்.

17. உலகத்துப்பொருள்களை அளத்தற்கு மளவைகளுள்ளன. அவையாவன.

"எண்ணலெடுத்தன் முகத்தனீட்ட
லெனநான்களவை யென்மனா் புலவர்."

எண்ணல்—இலக்கத்தால்; எடுத்தல். நிறை கோலால்; முகத்தல், நாழியால்; நீட்டல், கோலால், ஆம்.

முதலாவதுபிரமாணவியல்முற்றிற்று.

---

# இரண்டாவது தத்துவவியல்.

## ஆன்ம தத்துவம். 24.

18. 1. பூதங்கள் 5, பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.

2. ஞானேந்திரியங்கள் 5 சுரோத்திரம், துவக்கு, சக்ஷு சிங்நுவை, ஆக்கிராணம்.

3. தன்மாத்திரைகள் 5 சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம்.

4. கன்மேந்திரியங்கள் 5 வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்.

5. அந்தக்கரணங்கள் 4 மனம், புத்தி, அகங்காரம், சித்தம்.

## வித்தியாதத்துவம். 7.

19. காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை.

## சிவதத்துவம், 5.

20. சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம்.

ஆக அகக்கருவிகள் 36 ஆம்.

## புறக்கருவிகள், 60.

21. 1. பிருதுவியின் கூறு 5 மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை,
2. அப்புவின்கூறு 5 நீர், உதிரம், மச்சை, மூளை, சுக்கிலம்.
3. தேயுவின் கூறு 5 ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல்.
4. வாயுவின் கூறு 5 ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல்.
5. ஆகாயத்தின்கூறு 5 காமம், குரோதம், உலோபம், மோகம் மதம்.
6. வாயுக்கள் 10 பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன்,தேவதத்தன்,தனஞ்சயன்.
7. நாடிகள் 10 இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி.
8. வசனாதிகள்5 வசனம், கமனம், தானம், விசர்க்கம், அனந்தம்.
9. வாக்குகள் 4 சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி.
10. குணங்கள் 3 சத்துவம், ரஜஸ், தமஸ்.
11. ஏடணை 3 புத்திரஏடணை, உலகஏடணை, அர்த்தஏடணை. ஆகக் கருவிகள் 96ம் சரி.

22. அத்துவாக்கள் / அத்துவா வழி } 6 மந்திரம் 11. பதம் 81. வர்ணம் 51. புவனம் 224. தத்துவம் 96. கலை 5.

பாசம் 5 ஆணவம், கன்மம், மாயை, மயேயம், திரோதானம்.

ஆன்மா 3 ஆணவமாத்திரமுள்ளவர் விஞ்ஞானகலர். ஆணவகன்மமுள்ளவர் பிரளாயாகலர். ஆணவகன்மமாயையுள்ளவர் சகலர்.

சத்திகள் 5 பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி.

ஈசுரவடிவம் 9 அருவமாகிய சிவம், சத்தி, விந்து, நாதம். ஆக 4.
அருவுருவமாகிய சதாசிவன். 1.
உருவமாகிய மகேச்சுரன், உருத்திரன், விஷ்ணு, பிர்மன். 4.

கிருத்தியம் 5 சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்கிரகம். முன் மூன்று உடம்பிற்கும் பின்னிரண்டு உயிர்க்குமுரியன.

இடம் 3 தன்மை, முன்னிலை, படர்க்கை.

உபாதானத்திரயத்தின் காரியம் 4 தநு, கரண, புவன, போகம்.

சத்திநிபாதம் 4 மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம். சத்திநிபாதம்- இறைவன் சத்திபதிதல்.

தீக்ஷை 3 சமயம், விசேஷம், நிருவாணம்.

கோசம் 5 அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம்.

தோற்றம் 4 அண்டசம், சுவேதசம், உத்பிசம், சராயுசம்.

பிறப்புவகை 7 சுரர், நரர், மிருகம், பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம்.

23. சுத்தி 5 பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி.

புத்தியின்பாவங்கள் 8 தர்மம், ஞானம், வைராக்கியம், அதன்மம், அஞ்ஞானம், ஐஸ்வரியம், அநைஸ்வரியம், அவைராக்கியம்.

சிருஷ்டி 2 சாக்ஷாத் சிருஷ்டி, ப்ரமபராசிருஷ்டி.

சம்ஹாரம் 2 மஹாசம்ஹாரம், அவாந்திரசம்ஹாரம்.

பூஜை 2 உட்பூசை, வெளிப்பூசை.

புஷ்பம் 8 அகிம்சை, இந்திரிய அடக்கம், சாந்தி, தயை, ஞானம், தர்மம், சத்தியம், பாவனை.

இருவினையொப்பு—இருவினைகளையும் சமமாகக்காண்டல் அதாவது அவைகளைச்செய்ய நினையாதிருத்தல்.

மலபரிபாகம்—மலம்பக்குவப்படல், அதாவது ஆன்மசிற்சத்தியை மறையாதிருக்கும் தன்மைஎய்துதல்.

சத்திநிபாதம்—சத்திபதிதல், சத்தி, அருள், பாதம், பதிதல். நி-உபசர்க்கம். அதன்வகை (4)

மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்.

வினை 2 நல்வினை, தீவினை.

கன்மம் 3 சஞ்சிதம், பிரார்த்தம், ஆகாமியம். இப்பிரார்த்தம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், ஆதியான்மீகம், என மூன்று வகைப்படும்.

காரணாவஸ்தை 3 கேவலம், சகலம், சுத்தம்.

காரியாவஸ்தை 15 கேவலாவத்தையின் காரியமாகிய கீழாலவஸ்தை 5. அவையாவன. சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் துரியாதீதம்.

சகலாவத்தையின் காரியமாகிய மத்திபாலவஸ்தை. 5. அவையாவன. சாக்கிரத்திற் சாக்கிர முதலியன. சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலாவஸ்தை 5. அவை அமலசாக்கிர முதலியன.

காலம் 3 இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்.

கலை 5 நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலை.

தசகாரியம் 10 தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம்.

மார்க்கம் 4 சன்மார்க்கம், சகமார்க்கம், புத்திரமார்க்கம், தாசமார்க்கம்.

பரமுத்தி 1 சிவசாயுச்சியம்.

சிவபதமுத்தி 3 சாலோகம், சாமீபம், சாரூபம்.

ஆதாரமுத்தி 6 மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை.

மண்டலம் 3 சந்திரமண்டலம், ஆதித்தமண்டலம், அக்கினிமண்டலம்.

பிரசாதகலைகள் 16 அவையாவன, மேதைகலை, அற்கிசகலை. விஷகலை, விந்துகலை, அர்த்தசந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியாபிநிகலை, வியோமரூபைகலை, அநந்தைகலை, அநாதைகலை, அநாசிருதைகலை, சமனைகலை, உன்மனாகலை, என்பனவாம்.

நாதம் 10 மணி, கடல், ஆனை, சங்கு, குழல், மேகம், வண்டு, தும்பி, யாழ், பேரிகை. இவைகளின் தொனிகள்போன்ற ஒலி.

வியாபகம்—நிறைவு. வியாத்தி—சமநிறைவு. வியாப்பியம்—அடங்கியநிறைவு.

சாம்பவதீக்கை — விஞ்ஞானதீக்கை, பரிசித்தும், சிந்தித்தும், பார்த்தும், செய்யுந்தீக்கை.

சத்திதீக்கை—யோகவலியால் குரு மாணுக்கனது தேகத்துட் புகுந்து அருண் ஞானவிழியால் மோகத்தினைப் போக்குந்தீக்கை.

கிரியாதீக்கை—குண்ட மண்டலாதிகளியற்றிச் செந்தீ வளர்த்து மந்திரங்கள் செபித்துச் செய்யுந்தீக்கை.

சையோகம்—புணர்ச்சி. சையுத்தம், சையோக சம்பந்தத்தால் விர்த்தியாயது. சமவாயம்-ஒற்றுமை. சமவேதம்-சமவாய சம்பந்தத்தால் விர்த்தியாயது. தாதான்மியம்-விட்டுநீங்காத சம்பந்தம்.

## 24. தத்துவங்கள் தோன்று முறைமை.

மாயைகளில் தத்துவங்கள் தோன்று முறைமை எங்ஙனமெனின்? பரமசிவனுடைய பராசத்தியருளினாலே குடிலையிலே நாதமும் நாதத்திலே விந்துவும் விந்துவிலே சதாக்கியமும் சதாக்கியத்திலே ஈஸ்வரமும் ஈஸ்வரத்திலே சுத்தவித்தையும் தோன்றும். இவை ஐந்தனுள் முன் சொன்ன விந்துவிலே நாலுவாக்கும் ஐம்பத்தோரட்சரமும் எண்பத்தொரு பதமும் பஞ்சகலைகளும் சத்தகோடி மகாமந்திரங்களும் தோன்றும்.

அசுத்த மாயையிலே நின்று அநந்த தேவநாயனா ரருளினாலே காலமும், நியதியும், கலையும் தோன்றும். கலையிலே வித்தை தோன்றும். வித்தையிலே அராகந்தோன்றும். ஆன்மா இவ்வைந்துடன் கூடிப் பஞ்ச கஞ்சுகனான புருடனாம். முன்சொன்ன கலையிலே உருத்திரதேவ நாயனார் அருளினாலே குணரூபமான மூலப்பிரகிருதி தோன்றும். மூலப்பிரகிருதியிலே முக்குணங்களுந் தோன்றும். முக்குணங்களுந் தோன்றாமல் நின்றவிடம் அவ்வியக்தம். அந்த அவ்வியக்தத்தில் சித்தமும், சித்தத்திற் புத்தியுந் தோன்றும். புத்தியிலே அகங்காரந் தோன்றும். அவ்வகங்காரம் தைசதாகங்கார மென்றும், வைகாரிகாகங்கார மென்றும், பௌதாதிகாகங்கார மென்றும் மூவகைப்படும். இவற்றுள் தைசதாகங் காரத்திலே சாத்துவிககுணத்தைப் பொருந்திய மனமும் ஞானேந்திரிய மைந்துந் தோன்றும். வைகாரிகாகங் காரத்திலே இராசதகுணத்தைப் பொருந்திய கன்மேந்

திரிய மைந்துந் தோன்றும். பௌதாதிகாகங் காரத்திலே தாமத குணத்தைப் பொருந்திய தன்மாத் திரைகளைந்துந் தோன்றும். சத் தத்திலே ஆகாசந்தோன்றும். பரிசத்திலே வாயு தோன்றும். ரூபத் திலே தேயு தோன்றும். ரசத்திலே அப்புதோன்றும். கந்தத்திலே பிருதுவி தோன்றும்.

## தத்துவங்கள் ஒடுங்கும் முறைமை.

பிருதுவி கந்தத்திலே யொடுங்கும். அப்பு ரசத்திலே ஒடுங்கும். அக்கினி ரூபத்திலே யொடுங்கும். வாயு பரிசத்திலே யொடுங்கும். ஆ காசஞ் சத்தத்திலேயொடுங்கும். தன்மாத்திரைகளான சத்தாதிகளைந் துந் தாமத குணத்தினையுடைய பூதாதிகாகங்காரத்திலே யொடுங் கும். கன்மேந்திரியங்களான வாக்காதிகளைந்தும் இராசதகுணத்தினை யுடைய வைகரிகாகங்காரத்திலே யொடுங்கும். மனம், புத்தி, இந்திரி யங்களென்ற சோத்திராதிகளைந்துஞ் சாத்துவிக குணத்தினையுடையா தை சதாகங்காரத்திலே யொடுங்கும். இந்த அகங்கார மூன்று மாங் காரத்திலேயொடுங்கும். புத்தி சித்தத்திலேயொடுங்கும். சித்தம்அவ் வியத்தமான பிரகிருதியிலே யொடுங்கும். இனி அராகம் வித்தையி லே யொடுங்கும். வித்தை முன்சொன்ன கலைபிலேயொடுங்கும். கலை யுங் காலமு நியதியும் அசுத்தமாயையிலே யொடுங்கும். புருடன் அராகமுதலான தொடுங்குஞ் சமுதாயத்திலே யொடுங்கும். இனி நாலுவாக்குமைம்பத்தோரக்ஷரமுமெண்பத்தொருபதமுஞ்சத்தகோ டி மகாமந்திரமுஞ் சகல சாத்திரமும் பந்த முத்திகளும் பஞ்சகலைக ளுஞ் சுத்தமாயையிலே யொடுங்கும். சுத்தவித்தை ஈசுவரதத்துவத் திலே யொடுங்கும். ஈசுரதத்துவஞ் சாதாக்கியத்திலே யொடுங்கும். சாதாக்கியம் விந்துவிலே யொடுங்கும். விந்து நாதத்திலே யொடுங் கும். நாத முன்சொல்லப்பட்ட சுத்தமாயையிலே யொடுங்கும். ஆக மாயைகளிரண்டும் கிரியாசத்தி கைப்பட்டே நிற்கும். இச்சா சத்தி ஞானசத்தி கிரியாசத்தி யிவை மூன்றும் ஆதிசத்தியிலேயொடுங்கும். பராசத்தி சிவத்திலொடுங்குமென வறிக.

## 25. கலைகளில் அத்துவாக்கள் அடங்கு முறைமை.

நிவிர்த்தி கலையிலடங்குவது மந்திரம் சத்தியோசாதமு மிருதய மும் பதம் (28) அட்சரம்(1) புவனம் (108) தத்துவம் பிருதுவி அதி

தேவதை பிரமாவு மடங்கும். பிரதிட்டா கலையில் வாமதேவமுஞ் சிரசும் ஆக மந்திரம்(2)ம் பதம்(21)ம் அட்சரம்(23)ம் புவனம்(56)ம் ஆத்மதத்துவம்(23)ம் அதி தேவதை விட்டுணுவு மடங்கும். வித்தியாகலையில் மந்திரம் அகோரமுஞ்சிகையும் பதம்(20)ம்அட்சரம்(7)ம் புவனம்(27)ம் வித்தியாதத்துவம்(7)ம் அதிதேவதை புருத்திரனுமடங்கும். சாந்திகலையில் மந்திரந் தற்புருடமுங் கவசமும் பதம்(11) ம் அட்சரம்(3)ம் புவனம்(18)ம் தத்துவஞ் சுத்தவித்தை யீசுரஞ் சாதாக்கியம்(3)ம் அதிதேவதை மகேசுரனுமடங்கும். சாந்தியாதீதகலையில் மந்திரம்,ஈசானம்,நேத்திரம், அத்திரம்(3)ம் பதம்(1)ம் அட்சரம்(16) ம் புவனம்(16)ம்தத்துவம் சத்தி தத்துவஞ் சிவதத்துவம்(27)ம் அதிதேவதை சதாசிவனுமடங்கும். ஆகக்கலை 5ம் சுத்தமாயையிற் சுத்தப் பிரதேசத்திலடங்கும் ஆக சுத்தமாயை அசுத்தமாயை (2)ம் கிரியாசத்தியிலடங்கும். கிரியாசத்தியும் ஞானசத்தியும் இச்சா சத்தியும் ஆதிசத்தியிலடங்கும். ஆதிசத்தி பராசத்தியிலடங்கும். பராசத்தி சிற்சத்தியிலடங்கும். சிற்சத்தி சிவத்திலடங்கும். சிவம் நித்தியமாய்ச் சுத்தமாய்நிர்மலமாய்நிராமயமாய் அகண்டிதமாய்ச்சச்சிதானந்த சொரூபமாய் வியாபகமாய் நிராதாரமாய் மனவாக்குக் காயங்கங்களுக்கெட்டாததாய்த் தாக்கற்று நிற்கும்.

மற்றவைகளைச் சித்தியார் முதலிய பரந்தநூல்களில் கண்டு தெளிக.

**இரண்டாவது தத்துவவியல் முற்றிற்று.**

---

# மூன்றாவது பொதுவியல்.

26. கண்ணடிக்கு இயற்கையில் ஒளியிருப்பதுபோலக் கண்ணுக்கும் ஒளி யுண்டு.
27. எதினின்றும் எதுவந்ததோ அது தனது காரணத்தின் தன்மையை யுடையதாயிருக்கும்.
28. சூனியத்தினின்றும் ஒன்றும் உண்டாகாது.
29. இல்லது தோன்றாது உள்ளது அழியாது இதுதான் சற்காரியவாதம்.

30. எது எதினின்று வரக்கூடுமோ அது அதனின்று வரும்.
31. பிறப்புண்டேல் இறப்புமுண்டு.
32. ஒலியின் நுணுக்கந்தெரிந்தவர் எப்பாஷையு மறியலாம்.
33. யாவும் பக்குவப்பட்டபோதுதான் பயன் பலிப்பிக்கும்.
34. அண்டத்துள்ள தத்துவங்கள் சூக்கும மாய்ப்பிண்டத்துள்ளும மைந்திருக்கின்றன.
35. ஆகாயத்துள் சூக்கும ஆகாயமிருக்கிறது அதனிடத்தில் ஒளி விளங்குகின்றது.
36. முன்விட்டகுறை யிருந்தாற்றான் மற்றொரு பிறவியில் ஞானம் வந்துறும்.
37. இலைகளுள் காய்மறைந்திருத்தல்போல் உண்மை முதலில்மறை ந்து நின்று பின் தோன்றும்.
38. அருவத்திற்குஞ் சொரூபமுண்டு. அருவத்தினின்றும் உருவந் தோன்றும்.
39. நம்முடைய வசனங்கள் யாவும் ஆகாயத்திற் பதிவு செய்யப் படும்.
40. ஒருவனைப்பற்றி மற்றொருவன் நினைத்த நினைப்பு ஆகாயத்தின் வழி சென்று அவனைத் தாக்கா நிற்கும்.
41. சடம் அறிவில்லாப்பொருள் இது தானே இயங்காமல் ஒரு சேதனனால் (இயக்குவித்தால்) இயங்கும். இயங்குந் தன்மை அதனிடத்தில் நிலைபெறும்.
42. காரணமின்றிக் காரியம் நிகழாது. மூலகாரணத்திற் கோர்காரணம் விசாரித்தல் கூடாது. காரணத்திலிருந்து காரியம்தோன்றும். காரியம் காரணத்திலொடுங்கும்.
43. ஒளியுள் இருள் அடங்கி நிற்கும்.
44. உண்மை உண்மைதான் பொய் பொய்தான்.
45. ஒரு இயற்கைப்பொருள் தன் தன்மையில் என்றுமாறாது.
46. ஒலிக்கும் உருவமுண்டு.
47. அநாதி நித்தியம் என்றால் ஆதியின்றி என்று முள்ளதென்று தாற்பரியம்.
48. அரூபம் என்றால் கண்ணுக்குப்புலப்படாத உருவத்தையுடைய தென்று பொருள்.

49. சத்து என்றால் நிலை மாறுதலின்றி என்று முள்ளது அசத்து என்றால் நிலைமாறுதலுடன் என்று முள்ளது.
50. பேரானந்தமே சொரூபமாயுள்ளவனுக்கு அவ்வானந்தாநுபவமில்லை.
51. ஒரு அசேதனம் அநேகமாகில் அது தன்னிலை மாறியழியும்.
52. சர்வ வல்லமை என்பது ஒரு நியதி பற்றியே நிகழும்.
53. சூக்குமத்திலிருந்து ஸ்தூலந்தோன்றும்.
54. ஒருகாரியம் நிகழ்வதற்குமுதல் துணை நிமித்தம்என்னு மூன்று காரணங்கள்வேண்டும்.
55. இறக்குங்காலத்திலுறும் அவாவே மறுபிறவி காட்டிநிற்கும்.
56. தோற்றமுண்டேல் அழிவுமுண்டு, சுட்டுப்பொருள்கள்யாவும் அழியும்.
57. இரண்டு அருவப்பொருள்கள் (ஒன்றினுளொன்று)கலந்து நிற்குந் தன்மையன.
58. கண்டகாரியத்தைக்கொண்டு காணாதகாரியத்தை அநுமிக்கவேண்டும்.
59. ஆன்மஅறிவை மேற்கொண்டு அறிவதெல்லாம் அசத்தே.
60. சித்திலிருந்து அசித்துத் தோன்றாது.
61. குணம் குணியைவிட்டு நீங்காமல் அடங்கிநிற்கும்.
62. வாதிகள் அழிவரே, யன்றி, வாதம், அழியாது.
63. பொதுவிதிகொண்டு சிறப்புவிதியை ஆராய்தல்கூடாது.

பொதுவியல் முற்றிற்று.

---

## நான்காவது பதியியல்.

———:-0-:———

64. உலகமாகிய காரியத்தைக் கண்டு பேரறிவுடைய காரணகர்த்தா ஒருவன் வேண்டுமென்று அநுமித்தல் வேண்டும்.
65. உலகிற்குச் சூரியன் ஒருவனாயிருத்தல் போலக் கடவுளும் ஒருவனே யாவன்.
66. ஆகாயம் எங்கும் வியாபித்திருப்பது போலக் கடவுளும் எங்கும் வியாபித்திருக்கின்றார்.

67. கடவுள் தன்வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, என்னும் என்றும் மாறுதலில்லாத எட்டுக்குணங்களையுடையவர்.

68. அக்கினியானது விரகினுள் மறைந்து நிற்பதுபோல இறைவன் பிரபஞ்சத்துள் மறைந்திருக்கின்றான்.

69. கடல் நீரில் அடங்கிய உப்பு பரிணமித்தல்போல வியாபகமாய் நிற்குங்கடவுளும் உருவமெய்துவர். அரூபமாயுள்ள பிராணவாயுவும், ஜலவாயுவும் சேர்ந்து உருவமெடுப்பதுபோல் இறைவனும் சத்தியுஞ் சேர்ந்து உருவெடுப்பார்.

70. சூரியனுடைய ஒளியானது அசுத்தத்தைச்சார்ந்து நின்றாலும் தான் அசுத்தப்படாதவாறுபோல் இறைவன் நரகிலும் வியாபித்திருந்தாலும் அவன் அதில் தாக்குற்றுத் துன்பமெய்தான்.

71. சூரியனுடைய சந்நிதானத்தில் தாமரை அலர்தலும், தண்ணீர் சுவறுதலும், ஆம்பல் குவிதலும் போல ஈசுவர சந்நிதானத்தில் ஐந்தொழில் நடைபெறும்.

72. காந்தம் தன் எதிர்ப்பட்ட இரும்பை இழுத்தல்போல ஈசன் தன்னை நோக்கிய ஆன்மாவைத் தன் வசம் இழுப்பான்.

73. சூரிய சந்நிதானத்தில் பலதொழில்கள் நடந்தாலும் அவன் விகாரப்படாமல் இருத்தல்போல ஈசுவர சந்நிதானத்தில் ஐந்தொழில் நடந்தாலும் அவன் விகாரப்படான். ஆதலால் அவன் நிர்விகாரி என்றழைக்கப்பெறுவான்.

74. குயவன் குடம் பானை கலச முதலியவைகளைச் சமைத்தல்போல், ஈசுவரனும் பலவகைத் தேகங்களைச் சமைப்பான்.

75. குயவன் மனிதர்கள் விரும்பிய பாத்திரங்களைச் செய்துகொடுத்தல்போல ஈசன் ஆன்மாக்களின் கருமத்துக்குத் தக்கபடி விரும்பிய தேகத்தைக் கொடுப்பான்.

76. குயவன் மண்ணை முதற்காரணமாக வைத்துப் பாத்திரங்கள் அமைப்பது போல் ஈசன் மாயையை முதற்காரணமாகவைத்து உலகத்தை உண்டாக்குவான்.

77. அகரம் தனித்தும் மற்றைய எழுத்துக்களுடன் கலந்தும் நிற்றல் போல ஈசன் உலகத்தின் உள்ளும் புறமும் வியாபித்திருப்பான்.

78. அகரம் எழுத்துக்களுக் கெல்லாம் முதலாய் நிற்பது போல் ஈசுவரன் எவற்றிற்கும் முதல்வனாய் நிற்பான்.

79. குயவன் தண்டசக்கரங்களைத் துணையாகக் கொண்டு பாத்திரங்கள் செய்வது போல் ஈசுவரன் தனது சத்தியைத் துணையாகக் கொண்டு பிரபஞ்சத்தை உண்டாக்குகிறான்.

80. குயவன் பாத்திரங்களுக்கு நிமித்த காரணனாயிருத்தல் போல ஈசன் இவ்வுலகிற்கு நிமித்த காரணனாயிருக்கிறான்.

81. கடவுள் அநாதிநித்தியர். அவருக்கு ஒப்பாரு மிக்காருமில்லை.

82. கடற்பரப்பைப் போல சிவம். கடல் ஜலத்தைப்போல ஆன்மா. ஜலத்தின் உப்பைப்போல ஆணவம்.

83. கடவுள் ஆனந்த சொரூபி. யாதலால் அவருக்கு வேறு ஆனந்தம் வேண்டுவதில்லை. அவரை அடைந்த ஆன்மா சிவானந்தத்தை அனுபவிக்கும்.

84. ஒரு அரசன் மந்திரி பிரதானிகளைவைத்து ராஜ்ஜியபரிபாலனம் பண்ணுவது போல் ஈசன் பிர்மா விஷ்ணு உருத்திரன் முதலியோர்களை வைத்து இவ்வுலகத்தை நடத்துகிறான்.

85. ஆன்மா ஒருதேராகில் ஈசன் அவ்வான்மை நடத்துந் தேர்ப்பாகனாவன்.

86. ஈசுவரன் சமுசாரசாகரத்தில் வரம்பின்றி ஒடுங்கப்பலாகிய ஆன்மாவைச் சரியானமார்க்கமாய் நடத்தும் *மாலுமியாகிறான்.

87. ஒருமரம் தன்னையடைந்தோர்க்கு நிழல்கொடுத்து உதவுதல் போல் ஈசுவரன் தன்னைச்சார்ந்தவர்களுக்கு திருவடி நிழலைக் கொடுத்துக்காப்பாற்றுவான்.

88. மேகம் கைம்மாறுகருதாது மழைபொழிவதுபோல் ஈசனும் பிரதியுபகார விருப்பமின்றிக் கருணைமழை பொழிகிறான்.

89. ஈசுவரன் தனது அட்டமூர்த்தங்களினின்று வெளிப்படுவான். அட்டமூர்த்தங்களாவன-பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், ஆன்மா, என்பனவாம்.

---

* மாலுமி-கப்பலோட்டுகிறவன்.

90. ஒருஅரசன் தனது ஆணைவழிநில்லாரைத் தண்டித்தல்போல், ஈசுவரன் தனதுஆணைவழி நில்லாரைத் தண்டிக்கிறான்.

91. ஒருதாய் தன்பிள்ளையை அடித்துப்பாலூட்டுவதுபோல் ஈசுவரன் ஆன்மாக்களின் வினைக்குத்தக்கவாறு கன்மத்தை அநுபவிக்கச்செய்து தன்பேரின்பத்தை ஊட்டுகிறான்.

92. ஒருவைத்தியன் கருவிகொண்டு நோயாளியின்தேகத்திலுள்ள கட்டியை அறுத்து அவனுக்கு இதம்உண்டாக்குவதுபோல் ஈசன் தனது பெருங்கருணையால் ஆன்மாக்களைத்தண்டித்து இதம் உண்டாக்குகிறான்.

93. அரசன் ஆணைவழிநிற்பாரை அவன்நேசித்து அவர்களுக்கு இதஞ்செய்வதுபோல் இறைவன் தன்வழி நிற்பார்க்கு இதஞ்செய்வான்.

94. ஒருவண்ணான் புடவையின் அழுக்கை உவர்கொடுத்து எடுப்பதுபோல், ஈசன் ஆன்மாவின் அஞ்ஞானத்தை மாயாதேகத்தைக்கொடுத்து நீக்குகிறான்.

95. ஒருவண்ணான் பலபல வீட்டாரின் புடைவைகளை வெளுத்தபின் பகுத்தறிந்து எடுத்துக்கொடுப்பதுபோல், ஈசனும் அவரவர் கன்மத்தைஅறிந்து எடுத்துக்கொடுப்பான்.

96. உடலை நடத்தற்கு உயிர் நாயகனுயிருத்தல்போல் ஆன்மாவை நடத்தற்கு ஈசன் நாயகனுயிருக்கிறான்.

97. மேகபடலத்தைக்கிழித்து மின்னல் வெளிப்படுமாறுபோல அஞ்ஞானபடலத்தைக் கிழித்து ஒளி ரூபியாய் ஈசன் வெளிப்படுவான்.

98. சூத்திரதாரிகள் சூத்திரப்பாவையை ஆட்டுவது போல ஈசன் நம் வினைக்குத் தக்கவாறு நம்மை ஆட்டுவிக்கிறான்.

99. ஈசன் அஞ்ஞானிகளுக்கு பாலில் நெய் போல் மறைந்து நின்றாலும் மெய்ஞ்ஞானிகளுக்குத் தயிரில் வெண்ணெய் போல வெளிவந்து நிற்பான்.

100. அழுதபிள்ளைக்குத் தாய் பாலூட்டுவதுபோல ஈசனைப்போற்றித் துதித்து நின்றவர்களுக்கு அவன் இன்பம் ஊட்டுவான்.

101. சூரியன் புறவிருளை நீக்குவதுபோல ஈசுரன் அஞ்ஞானமாகிய அகவிருளை நீக்குவான்.

102. ஒருவன் வயிற்றினுள் வசிக்கும் புழுக்கள் அவன் அடையும் இன்ப துன்பங்களை அனுபவியா. அதுபோல ஆன்மாவின்உள் நிற்கும் இறைவனும் ஆன்மா அடையும் இன்ப துன்பத்தை அனுபவியான்,

103. கோள்களுள் காணப்படாத இராகு கேதுக்கள் கிரகணகாலத்தில் சூரிய சந்திரர்களிற் றோற்றுமாறுபோல் மறைந்துநின்ற இறைவனும் ஆன்மா பக்குவப்பட்டகாலத்தில் தோன்றி நிற்பான்.

104. எத்தொழிலையும் நடத்துதற்குரியகாலம் விகாரப்படாது இருத்தல் போல ஈசுரன் பலதொழில்கள் நடத்தினும் விகாரப்படாதிருக்கிறான்.

105. முத்தொழில்களில் சங்காரத்தொழில் மேலானதொழில் ஆதலினால் அதனைச்செய்யுமுருத்திரன் மேலான கடவுளாவான்.

106. சூரியனின்றிக் கண்ணுக்குக் காட்சி நிகழாதது போல் இறைவனையின்றி ஆன்மாவிற்கு அறிவு தோன்றுமாறு இல்லை.

107. திதிகர்த்தா *மூலப்பகுதி வடிவாயிருக்கிறார் ஆதலால் அவருக்கு அதன்மேலுள்ள தத்துவங்களின் வியாபகமில்லை. சங்காரகர்த்தாவுக்குமூலப்பகுதிக்கு மேலும் வியாபகமுண்டு. அவரிடத்திலேயே திதி கர்த்தாலயமாகிறார். ஆதலால் அச்சங்காரகர்த்தா உலகிற்கு முதற்கடவுள்.

103. கடவுள் கண்ணாடியைப்போல் என்றும் நின்மலனாயிருக்கிறார்

10). கற்றநூற்பொருள் உள்ளத்தில் தோன்றும்போது உள்ளம் அதிற்றோடக்குறா வாறுபோல், ஈசன் உலகைச்சங்கற்பத்தாற் படைத்தாலும் அவன் தொடக்குற்று நில்லான்.

110. கனவிற்கண்டவற்றை நனவிலுணர்ந்தவன், அவைகளிற்றொடக்குறாது இருத்தல்போல், சங்கற்பத்தால் உலகைப்படைக்கு, ங்கடவுளும் தொடக்குற்றுநில்லார்.

111. ஆன்மாக்களுக்கு யாதொரு சுதந்திரமுமில்லை, ஈசுவரனேஎல்லாச்சுதந்திரமு முடையவன்.

112. தேர் முதலாயின பலராற் செய்யப்படினும் அப்பலரும் ஒருவன் ஏவல்வழி நின்றேசெய்வர். அதுபோல உலகம் பிரமாவால்

* மூலப்பகுதி—பிரகிருதி.

சிருஷ்டிக்கப்பட்டும், விஷ்ணுவால் திதிக்கப்பட்டும் இருந்தாலும் அவர்கள் ஒரு முழுமுதற்கடவுள் ஏவல்வழி நிற்பாராவர். ஆதலால் உலகிற்கு அநேக ஈசுரர் இல்லை.

113. பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின் அதனை நடத்தும், முதற்கடவுள் முற்றறிவு முதலிய குணங்களை இயற்கையிலேயே உடையவராவர்.

114. உடலில் உயிர்கலந்திருத்தல்போல் உயிரில் இறைவன் கலந்திருக்கிறான்.

115. கண்ணொளிவேறுங் கதிர்ஒளிவேறுமாயிருந்து கலத்தல்போல் ஆன்மாவோடு இறைவன் கலந்துநிற்பன்.

116. கண்ணொளியில் ஆன்மபோதம்போல், இறைவன் ஆன்மாவோடு கூடிநிற்பன்.

117. தேகம் ஜடம், ஆன்மா அற்ப அறிவுடையவன், ஆதலால் ஈசனே இவ்விரண்டையும் கூட்டிவைப்பான்.

118. சூரியன் பிரகாசித்து நின்றாலும் குருடனுக்குப்பயனில்லை. அதுபோல் ஈசன் எங்கும்நிறைந்து நின்றாலும் அஞ்ஞானிகளுக்குப்பயனில்லை.

1 9. பால் பசுவின் உடம்பெல்லாம் வியாபித்திருத்தல்போல் ஈசன் எங்கும் வியாபித்திருக்கிறான்.

120. பூதக்கண்ணாடியில் நமது முகம் விளங்குவதுபோல் ஞானக்கண்ணாடியில் ஈசன் விளங்குவான்.

121. ஆன்மாக்களை முத்தியிற்சேர்க்கவேண்டுமென்பதே, ஈசனது இச்சையாம். அவர்களோடிணங்கிநின்று ஆன்மநிலையையும், தன் நிலையையும் உணர்த்துதலே ஞானமாம். பஞ்சகிருத்தியம் நடத்துதலே கிரியையாம். இப்பஞ்சகிருத்தியம் அநாதி நித்தியமாயுள்ளது.

122. எங்கும் ஈசனது கண் இருத்தலால் அவனை அறியாமல் யாம் செய்யத்தக்கது ஒன்றுமில்லை.

123. தாயினும் இனியனாகிய சங்கரனைப் போற்றித்துதித்தால் நமக்கு அவன் அருட்பாலூட்டுவான்.

124. அவனுக்குஅன்பர்உள்ளமே கோயில் . அவர்ஆன்மாவே இலிங்கம்.

125. ஒருவீட்டினுள் கள்ளர் பதுங்கியிருப்பதுபோல ஆன்மாவினுள் ஈசன் மறைந்திருக்கிறான்.

126. இறைவனுடைய ஞானத்தினாலேயே இறைவனை யறியவேண்டுமேதவிர மற்ற பசு பாச ஞானத்தால் அறிய முடியாது.

127. நீர் நிழலானது நீரோடு விரவிநின்று புலப்படாததுபோல ஆன்ம அறிவோடு விரவிநிற்கும் சிவசைதன்னியம் அஞ்ஞானிகளுக்குப் புலப்படாமலிருக்கிறது.

128. நாம் சிவபிரானை வணங்கினால் அவன் வானவர் நம்மைவந்து வணங்கவைப்பான்.

129. மரத்தை அசைவித்தால் அதின் நிழலெல்லாம் அசையும் அதுபோல ஈசன் ஆட்டுவித்தால் இவ்வுலகெல்லாம் அவன் வழியாடாநிற்கும்.

130. மரத்தின் பொந்துகளில் தேன்கூடு இருப்பதுபோல நமது இருதயக்குகையில் ஈசனென்னும் ஆநந்தத்தேன் இருக்கிறது.

131. சிறுநெருப்புப்பொறியும் பெரியஊரை அழிக்கும் அதுபோலக் கடவுளுடைய கடைக்கண் பார்வை மலைபோலநின்ற கன்மத்தை அழிக்கும்.

132. ஒருவட்டத்திற்கு அந்த மாதி காணமுடியாது. அதுபோல ஈசனுக்கு ஆதியந்தமில்லை.

133. ஈசனருள் இருந்தால் விரும்பியவெல்லாங் கைகூடும்.

134. சிவபெருமான் திருமேனி செங்கனலையும் செவ்வானத்தையும் ஒத்துத்திகழும்.

135. ஈசனறிவு சூரியப்பிரகாசம்போலவும், ஆன்மாவின் அறிவு, மின்மினியைப்போலவும், இருக்கின்றன.

136. பஞ்சேந்திரியங்களுக்குள் கண்சிறந்திருப்பதுபோலப்பஞ்சகர்த்தாக்களுக்குள் சதாசிவம் முதல்வராயிருக்கிறார்.

137. எருது நினைத்தபடி எருதாளன் பொதியேற்றமாட்டான். அதுபோல ஆன்மாநினைத்தபடி, ஈசன் வினைகூட்டமாட்டான்.

138. நீரோட்டமானது இடையீடு இல்லாமற் செல்வதுபோல ஈசனுடைய கருணைவெள்ளமும் இடைவிடாமற் பாய்ந்தோடுகின்றது.

139. கல்லினுட்டேரை மறைந்திருப்பதுபோல, ஈசன் ஆன்மாவி னுள் மறைந்திருக்கிறான்.

140. அக்கினிமயமாகிய ஈசன் எங்கும் வியாபித்திருத்தலால் இவ் வுலகம் அக்கினிமயமென்று புராணங்கள் கூறுகின்றன.

141. சிறியாநங்கை வேரைக்கண்டாற் பெரிய சர்ப்பமும் தலைமட ங்கும். அதுபோல ஈசனது திருவருள் கிட்டினாற் பெரிய வினை மலையும் அழியும்.

142. அசேதனப்பொருள்களாகிய சிந்தாமணி, கற்பகம் வேண்டி னோர் வேண்டியாங்கு அளிக்குமாகில் சர்வஞானமுள்ள ஈசன் அன்பர்கள் வேண்டியாங்கு உபகரிப்பானென்பதற்கு யாதொ ரு தடையுமில்லையாம்.

143. இறைவன் பெண்ணுமல்லன், ஆணுமல்லன், அலியுமல்லன் ஆ னால் இவைகளினுள் வியாபித்து அப்பாலு நிற்பன்.

144. இறைவனுக்குச் சொரூப இலக்கணம் தடத்த இலக்கணம் எ ன்று இரண்டு லக்ஷணங்கள் உள்ளன. சொரூபலக்ஷணம் உண் மைநிலை. தடத்தலக்ஷணம் உருவெடுத்து ஆன்மாவிற்கு உபகரி க்கும் நிலை.

145, அவன் காலம்போல அரூபியாய் நின்று சடசித்துக்களை இயக் குவான்.

146. சூரியனைப்போலும் சிவம்; அவன் கிரணத்தைப்போலும் சத் தி; அதில் கலக்கும் கண்ணொளிபோலும் ஆன்மா.

147. ஆகாயத்தைப்பிரியாது நின்ற காற்றுக்குரிய, கந்தம், வெம் மை, தட்பம், முதலியன அவ்வாகாயத்திற்கு இன்றாதலின், இறைவனது வியாபகத்திற் சஞ்சரிக்கும், ஆன்மாவுக்குரிய ஆ ணவம் அவ்விறைவனுக்கு இல்லையாகும்.

148. இறைவன் உயிர்களுக்குத் தன்மை, முன்னிலை, படர்க்கையா ய்நின்று உணர்த்துவன். தன்மை, ஆணவத்தைநீக்கித் தன்னை உள்ளபடி தோற்றுவித்தல். முன்னிலை, நன்மை தீமைகளைக் குருவாய்த்தோன்றித் துரத்துதல். படர்க்கை, நூலினால் காண வைத்திடுதல்.

149. சிவன் அநாதிமுத்தன். முத்தியடைந்தஆன்மா, ஆதி, முத்தன்

150. ஈசுவரனுடையசத்தி, பராசத்தி, திரோதானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி என்ஐந்து வகைப்படும். பராசத்தியின் சொரூபம் ஞானம். அது சூரியனும் கிரணமும் போலச் சிவத்தோடு பின்னமின்றி யொன்றாயிருக்கும்.

151. ஒரு அரசனுடைய வல்லமையானது அரூபமாய்நின்று காரியங்களை நடத்தல்போல் ஈசுவரனுடைய சத்தியும் அரூபமாய் நின்று பிரபஞ்சத்தைநடத்தும்.

152. ஒலிக்கு உருவமுண்டாம். ஒலிக்குள் ஒளிஉண்டாம்; அவ்வொளியே சத்தியாம்; அவ்வொளிக்குள் உள்ளொளி ஈசனும்.

153. ஈசனருட்சத்தியால் ஒரு சிறு துரும்பும் அகிலாண்டத்தொகுதியைப் படைத்துக் காத்தழிக்கும். ஆதலால் அவன்சத்திக்கு எதிர்நிற்பது ஒன்றுமில்லை.

154. பூவின்மணம்போலும் தண்ணீரில் குளிர்ச்சிபோலும் ஈசனுடன் சத்தி அபின்னமாய் நிற்பள்.

155. பாம்பின் கண் பார்க்குங்கால் கண்ணென்றும் கேட்குங்காற் செவியென்றும் சொல்லப்படுவதுபோல, இறைவனுடையசத்தி பெத்தகாலத்தில் திரோதானசத்தியென்றும், முத்திகாலத்தில் அருட்சத்தியென்றும் அழைக்கப்பெறும்.

156. உயிர்களுக்குப் பேறளித்தற்காக நிற்பது பராசத்தி. மலத்தைச் செலுத்திப் பக்குவப்படுத்துவது ஆதிசத்தி. உயிர்க்கிரங்கிநிற்பது இச்சாசத்தி. எவற்றையும் நோக்கி அறிவது ஞானசத்தி. நினைத்தபடிசெய்வது கிரியாசத்தி.

157. ஈசனது ஞானசத்தியின்வழி இச்சாசத்தி கிரியாசத்திகள்செல்லுவனவாம்.

158. ஞானசத்தி தனியே வியாபரிக்குங்கால் சிவமென்றும், கிரியாசத்தி தனியே வியாபரிக்குங்கால் சத்தியென்றும், இவை இரண்டும் ஒத்து வியாபரிக்குங்கால் சதாசிவமென்றும், ஞானசத்தி குறைந்தும் கிரியாசத்தி ஏறியும் வியாபரிக்குங்கால் மகேச்சுரமென்றும், கிரியாசத்தி குறைந்தும் ஞானசத்தி ஏறியும் வியாபரிக்குங்கால் சுத்தவித்தை என்றும் ஐந்துவகைப்படும். இவ்வைந்திற்கும் சிவதத்துவமென்று பெயர்.

159. சத்தியின்பேதத்தால் சிவனும் சத்தர்,உத்தியுத்தர், பிரவிருத்தர் என்று மூன்று பேதப்படுவர். இவர்களுள் சத்தர்-நிட்களர். இவருக்கு இலயர் என்றும் சாந்தரென்றும் பெயர். உத்தியுத்தர்—சகளாகளர். இவருக்குச் சதாசிவரென்றும் போகரென்றும் பெயர். பிரவிருத்தர்-சகளர். இவருக்கு ஈசரென்றும் அதிகாரரென்றும்பெயர்.

160. காரியபேதத்தினலே சத்திபேதமும், சத்திபேதத்தினலே சிவபேதமுமுண்டாம்.

குறிப்பு சத்திக்கும் பதிக்கும் சமவாய சம்பந்தம், ஆன்மாவிற்கும் பதிக்கும் தாதான்மியசம்பந்தம், பசுவிற்கும் ஆணவத்திற்கும் அநாதிசையோகம், உலகிற்கும் உயிருக்கும் சையுத்தசம்பந்தம்.

161. சிற்சத்தியே பதிக்குத் தேகம், கரணம், இடம், என அறிக.

162. இச்சாசத்தியாண்டும் ஒரு தன்மையாய் வியாபரித்து நிற்கும்.

163. சத்தர்சூக்கும ஐந்தொழில் செய்வர். அநுக்கிரகம்-என்றுமுள்ள கிருத்தியமாதலால் பஞ்சகிருத்தியம் அநாதி நித்தியம்.

பதியியல் முற்றிற்று.

---

## ஐந்தாவது பசுவியல்.

---

164. பசுக்கள் அநாதி நித்தியமாய் உள்ளவர்கள், இவர்கள் சிற்றறிவுடையவர்களாதலினல் சுதந்திர ஈனர்களாயிருக்கிறார்கள். இச்சுதந்திரவீனம் ஆணவமலத்தால் உண்டாயிற்று.

165. ஆன்மாக்கள் எண்ணிலவாய் விபுவாய் உள்ளவர்கள். விபு—வியாபகம்.

166. கண்ணாடி சார்ந்ததின் வண்ணமாய் நிற்பதுபோல் ஆன்மாவும் சார்ந்ததின் வண்ணமாய் நிற்கும்.

167. விளக்கொளியுள் கண்ணொளிவியாப்பியமாய் நிற்பது போல முதல்வனின் ஆன்மா வியாப்பியமாய் நிற்கும்.

168. ஆன்மா செம்பிற் களிம்புபோல அநாதியே ஆணவபந்தத்தையுடையது.

169. ஆன்மா பெத்தத்தில் அவிச்சையாற் கட்டுண்டு சுட்டுணர்வுடையதாய் நிற்கும். விடுபெற்றவழி இறைவனுடைய வியாபகத்துள் சுட்டுணர்வின்றி நிற்கும்.

170. ஆன்மா சமவியாபகமுடையனுனுலும் முதல்வனை நோக்க வியாப்பியமாவான்.

171. ஆன்மா இருவினையினுல் இறத்தல் பிறத்தல்களைப் பொருந்தும்.

172. ஆன்மாவும் ஈசனும் பொருளினுற் பேதமும் கலப்பினுல் அபேதமுமுள்ளவர்கள்.

173. ஆன்மா ஈசனிடத்திலிருந்து வந்திருந்தால் அதுவும் ஈசுரத்தன்மையுடையதாயிருக்கும். அவ்வாறு இல்லாததினுல் அது அவனிடத்திலிருந்து வந்ததாயில்லை.

174. ஆன்மாவுக்குத் தேகம் கொடுப்பது தண்டனையாகாது. அப்படிக்கொடுப்பதானது இருட்டிலிருந்தவனுக்கு ஒரு விளக்குக் கொடுத்தற்குச் சமானமாயிருக்கும்.

175. கண் இருளில் விழித்தால் இருண்மயமாய் நிற்கும். ஒளியில் விழித்தால் ஒளிமயமாய் நிற்கும்; அதுபோல ஆன்மா பிரபஞ்சத்தோடு சேர்ந்தால் அஞ்ஞானமயமாய் நிற்கும். இறைவனோடு சேர்ந்தால் மெய்ஞ்ஞானமயமாய் நிற்கும்.

176. ஒரு மாந்திரிகன் கருடபாவனைசெய்து விஷம் நீக்குவான். அதுபோல ஆன்மாவின் ஆணவம் சிவபாவனையால் நீங்கும்.

177. ஒருவன் ஒருபடித்துறையில் இறங்கி ஏறுதல்போல் ஆன்மாவும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம், என்ற படித்துறையில் இறங்கி மீண்டும் ஏறுவான்.

178. நல்லதைப்போகவிட்டுத் தள்ளுண்டதை வைத்துக்கொள்ளும் பன்னடைபோல் ஆன்மா நன்மையைக் கடைப்பிடியாது தீமையைக் கைக்கொள்வான்.

179. இறைவனுக்கு இச்சை, ஞானம், கிரியை என்னும் முச்சத்திகள் உள்ளனபோல் ஆன்மாவிற்கும் முச்சத்திகள் உள்ளன; இறைவனது சத்திகள் நடத்தினுல் ஆன்மாவின் சத்திகள் தொழிற்படும்.

180. தீயிரும்பு தன்குணம் குன்றி அக்கினி மயமாவதுபோல் ஆன்மா சுதந்திரமிழந்து இறைவழி நிற்பான்.

181. பாற்கடலில் உள்ள மச்சங்கள் அப்பாலை விரும்பிப் புசியாது பிறகடலிற் சென்று அங்குள்ள அழுக்குகளை யருந்துதல்போல அருட்கடலில் மிதக்கும் ஆன்மா அவ்வருளை விரும்பாது பிரபஞ்சக்கடலிலுள்ள துன்பத்தை யருந்துவான்.

182. வேம்புதின்ற புழுவைக் கரும்புதின்னவைத்தால் அதுமீண்டும் வேம்பையே விரும்பிச்செல்லும். அதுபோல பிரபஞ்சத்தில் புத்தியைச் செலுத்திய ஆன்மாவை ஈசனிடத்திற்செலுத்தும்படி வைத்தால் அவன் பழக்கவாசனையினுல் பிரபஞ்சத்தையே மீண்டும் மீண்டும் விரும்பிச்செல்வான்.

183. இறைவன் ஒரு இராசனுகவும் ஆன்மா இறைவனின் பேரானந்தமாகிய சொத்தை அனுபவிக்கும் இராசகுமாரனுகவுமிருக்கிறுன்.

184. சத்துப்பொருளும் அசத்துப்பொருளும் இருப்பதால் சதசத்து என்று ஒருபொருளிருத்தல்வேண்டும். அதுவே யான்மா.

185. ஆகாயம் இருளைச்சேர்ந்தால் இருளாயும் ஒளியைச்சேர்ந்தால் ஒளியாயும் இருக்கும். ஆன்மாவும் அங்ஙனமாம்.

186. நிறைந்த ஜலப்பரப்பினுள் மீன் சஞ்சரிப்பதுபோல ஆன்மா ஈசனது நிறைவிற் சஞ்சரிக்கிறுன்.

187. கடற்கரை மணலை எண்ணமுடியாததுபோல் ஆன்மாக்களையும் எண்ணமுடியாது.

188. நேரேநிற்கும் இருதலைக்கொள்ளிக்கம்பில் ஊரிச்செல்லும் எறும்புபோல் நல்வினை தீவினைகளினுட்பட்ட ஆன்மா அங்கு மிங்கும் உழன்று திரியும்.

189. உலவாக்கிழிபோல் ஆன்மாக்கள் தொகையில் குறைவுபட்டுத் தோன்றுவாம்.

190. துரோபதையின் வஸ்திரத்தைப்போல ஆன்மாக்களின் தொகை முடிவுகாண்பதரிதாம்.

191. அட்டையானது ஒன்றுபற்றி முன்பற்றியதைவிடுமாறுபோல் ஆன்மாவும் ஒரு தேகத்தைப் பற்றியபின்தான் முன் பற்றி நின்ற தேகத்தை விடும்.

192. காகத்திற்கு இரு கண்களிருந்தும் ஒரு கண்ணால் பார்த்தல் போல ஆன்மாவிற்கு தற்போதம் சிவபோதம் என்னும் இரு வகைப்போதங்களிருந்தும் தற்போதத்தின் வழியே செல்லுகின்றது.

193. தவளைபோன்றவைகள் நீரிலும் தரையிலும் வசிப்பனவாம். அதுபோல் ஆன்மா பிரபஞ்சத்தினிடத்தும் ஈசனிடத்தும் வசிக்கும் ஆற்றலுள்ளது.

194. ஒரு அரசன் அத்தாணிமண்டபத்தில் வீற்றிருந்து தன் கீழ்ப்பட்ட மந்திரி பிரதானிகளைக் காரியங்களிற் செலுத்தி ஆளுமாறுபோல் ஆன்மாவும் புருவமத்தியமண்டபத்தில் வீற்றிருந்துகொண்டு ஐம்பொறி முதலியவற்றை விஷயங்களிற் செலுத்துகிறான். இது சாக்கிராவத்தை.

195. படையுடன் பவனிபோந்த அரசன் மீண்டும் அந்தப்புரத்திற்குச்செல்லும்போது அவரவர்கள் நிற்கவேண்டிய ஸ்தானத்தில் அவரவர்களை விட்டுவிட்டுப்போமாறுபோல் ஆன்மா ஏகனாய் நிற்றற்குரிய துரியாதீதமாகிய அந்தப்புரத்திற்குச் செல்லும்போது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் என்னும் வாயில்களிற் கருவிகளை விட்டுவிட்டுச்செல்லுவான்.

196. கண் விளக்கின் வேறாயினாற்போல் உயிர் உடம்பின் வேறாம்.

197. எனதுடலினென்றலின் ஆன்மாதேகத்தினும் வேறாய் நிற்பதென்று தெற்றென விளங்கும்.

198. ஆன்ம அறிவு நிலைபுடையதன்று. ஏனென்றால் முக்குணத்தினால் மாறுதலுடைத்தாயினாலென்க.

199. ஆன்ம அறிவை நம்பி இப்பிறவிசாகரத்தைக்கடக்க முயல்வது மண்குதிரையைநம்பி ஒரு ஆற்றைக்கடக்க முயல்வது போலாம்.

200. ஞானக்கிரியா ரூபமான அறிவு ஆன்மாவில் எப்பொழுதும் இருக்கிறது. அதனை இறைவன் தொழிற்படுத்துவான்.

201. பசுக்களைக்கயிற்றினால் கட்டுவதுபோல இறைவனும் ஆன்மாக்களை ஆணவம், கன்மம், மாயை, என்னும் முப்புரிக்கயிற்றினால் கட்டுவான்.

202. ஆன்மா வியாபகன் சன்மாந்தர சம்பந்தத்தால் அவனே இன்ப துன்பங்களை யனுபவிப்பான். மனம், புத்தி, சடமாதலால் அவை அனுபவியா.

203. இறைவனது ஞானத்தை நோக்க ஆன்மாவின் ஞானம் சடம். ஆன்மா அறிவித்தால் அறியுஞ் சக்திபுடையவன்.

204. ஒரு உலண்டுப்பூச்சி தன்னூலால் தனக்கு வலைக்கூடுகட்டித் தன்னை அந்தக்கூட்டினுள் தானே அகப்படுத்திக்கொள்வது போல ஆன்மா தன் வினையால் தனக்கு ஒரு சிறைச்சாலையாகிய தேகத்தை யுண்டாக்கி அதனுள் தன்னை அகப்படுத்திக் கொள்கிறான்.

205. நீ நான் என்று சொல்லுதலாலும் சுக துக்க பேதத்தாலும் அறிவு பேதத்தாலும் ஆன்மாக்கள் வெவ்வேறாம்.

206. மண்ணுதியுண்டாக்கியது ஈசனுடைய இச்சையை நிறைவேற்றுதற்காகவன்று. என்னென்றால் அவன் சச்சிதானந்த சொரூபியாயிருத்தலினால் என்க. மண்ணிற்காமெனில் அது சடமாதலால் அதற்காகவுமன்று. ஆதலால் பாரிசேட அளவை கொண்டு சிற்றுயிர்க்கென்றே கொள்ளல்வேண்டும். பாரிசேடம்—கூட்டிக்கழித்தல்.

207. முக்குணங்களை இரதமாக்கி நாற்கரணங்களை இரதத்தின் வண்டிகளாக்கி இந்திரியங்களைக் குதிரைகளாக்கிப் புருடதத்துவத்தைச் சாரதியாக்கி மோகாதி குணங்களைத் தேர்முகமாக்கி ஆன்மா உணர்வாகிய அரசன் தனது ராச்சியமாகிய பஞ்ச பூதங்களிற் சென்று பவனி வருவான்.

208. ஆன்மா சூக்கும ரூபமாய் தந்தையின்பாற் புகுந்து இருதிங்கள் தங்கியபின் தன் தாயுதரஞ் சேரும்.

209. ஆன்மாவிற்குக் கேவலம் சகலம் சுத்தமென்று மூன்று நிலையுண்டு. அறிவு இச்சை செயல்களின்றி இருட்டில் கண்விழித்திருப்பது போல் ஆணவத்தினோடு நிற்பது கேவலம். அது கருவிகரணாதிகளோடு கூடிப்பிறந்திறந்து உழலுங்காலம் சகலம். இருவினை யொப்பு மலபரிபாகம்சத்திநிபாதம் குருவருளுற்றுப் பேரின்பமடைதல் சுத்தம்.

210. சகலர் விஞ்ஞானகலராகலாம். விஞ்ஞானகலர், சகலராகலாம்.

211. விஞ்ஞானகலர் நான்கு வகைப்படும். அவையாவன பக்குவர், அபக்குவர், பரமுத்தர், அபரமுத்தர் என்பனவாம்.

212. அகம் பிரம்மஞானத்தினாலும்யோகத்துறைவதினாலும்கலாதி பந்தம் அறுதலினாலும் வேதாந்த விசிஷ்டஞானத்தாலும் விஞ்ஞானகலத்துவம் வரும். இவர்களுக்குத்தனுகரண புவன போகங்கள் சுத்தமாயையிலுண்டாம்.

213. பிரளயாகலர் மூவகைப்படுவர். அபக்குவர், அபரமுத்தர், பரமுத்தர் என்பனவாம். இவர்கள் சாங்கிய ஞானத்தாலும் பிரளயகாலத்துக் கலையகன்றிருப்பதாலும் பிரளயா கலத்துவம் வரும்.

214. சகலர் மூன்றுவகைப்படுவர். பக்குவர், மந்தபக்குவர், அபக்குவர் என்பனவாம். சகலர் கலையோடு கூடியவர்கள்.

215. விஷ்ணு பிரமா முதலியோருஞ் சகலராவர். இவர்கள் அணுபட்சத்தார். அணு—ஆன்மா.

216. சம்பு பக்ஷ விஷ்ணு பிரமா முதலியோரும் வேறுளர். சம்பு-சிவம்.

பசுவியல் முற்றிற்று.

---

## ஆறுவது பாசவியல்.

---

217. ஆன்ம வியாபகத்தை அணுத்தன்மை செய்து நிற்பது எதுவோ அது ஆணவம், இது ஜடம்.

218. ஆணவமலம் இருளைப்போல ஏகந்தான், ஆன்மாக்களோடும் வெவ்வேறு சத்திகளையுடையதாய் நிற்கும்.

219. ஆணவம் அநாதி நித்தியமாயுள்ளது, செம்பிற் களிம்புபோலும் அரிசியில் தவிடுபோலுமாம்.

220. ஆணவத்தின் குணங்கள் எட்டு, அவையாவன. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், அராகம், அறியாமை என்பனவாம். இவைகளினின்று யான் எனது என்ற செருக்குண்டாகிக் கன்மம் தோன்றும். ஆகையால் ஆணவம் கன்மத்திற்கு மூலமாம்.

221. ஆணவத்தால் அஞ்ஞானம் உண்டானது. அவ்வஞ்ஞானத்தை நீக்கத்தான் பிறவி உண்டானது.

222. பசி சோற்றிலே விருப்பத்தை உண்டாக்குவதுபோல் ஆணவம் பிறவியிலே ஆசையை உண்டாக்கும். உடனே உடல் முதலியவற்றை ஈசன் கொடுப்பான்.

223. விஷம் ஜடமானாலும் உடல் உயிரைப்பிரித்தலாகிய செய்கை அதற்கு இருத்தல்போல, ஆணவம் ஜடமானாலும் அதற்குச் செயலுண்டு.

224. வண்ணான் அழுக்கைக்கொண்டு அழுக்கை எடுக்குமாறுபோல் இறைவன் மாயாதேகத்தைக்கொண்டு ஆணவசத்தியை நீக்குவான்.

225. ஒரு வியாதியைப் பண்டிதன் தீர்ப்பதுபோல ஆணவத்தினால் வரும் ஆசையை ஈசன் தீர்ப்பான்.

26. ஆன்மா அழிந்தால் ஆணவமும் அழியும். ஆன்மா நித்தியமாதலால் ஆணவமலமு நித்தியம்.

227. ஒரு மருந்தினால் விஷசத்தி யடங்குவதுபோல மெய்ஞ்ஞானத்தால் ஆணவசத்தி யடங்கும்.

228. ஒளி உள்ள இடத்தில் இருள் நீங்கினால் அது எங்கும் நீங்கினதாகமாட்டாது, அதுபோல மெய்ஞ்ஞானிகளிடத்தில் ஆணவம் நீங்கினதால் அது மற்றவர்களிடத்தும் நீங்கினதாகமாட்டாது.

229. ஒளியற்றம்பார்க்கும் இருளைப்போல் அறிவற்றம்பார்க்கும் மலம்.

230. மலமாகிய அழுக்கை ஞானநீரால் கழுவல் வேண்டும்.

231. மேகபடலம் உலகிற்குச் சூரியனை மறைப்பதுபோல் ஆணவ படலம் சிவனை ஆன்மாவிற்கு மறைக்கின்றது.

232. ஆணவமலம் ஒருவஸ்து, அது கண்ணிற்குப் படலாதிரோகம் போல் நின்று மறைக்கும், அது திரவியமாதலால் பக்குவப் படுந்தன்மை அதற்குண்டு, அக்காலத்தில் தன் சத்தி குன்றி நிற்கும் ஆனால் முதல் என்றுங் கெடாது.

233. இருள் எங்கும் ஒன்றாய் வியாபித்திருப்பதுபோல ஆன்மாவை ஆணவம் ஏகமாய் இருந்து வியாபிக்கும். அதற்கு அநேக வித சத்திகள் உண்டு.

234. மந்திரசத்தி தீயின் வெப்பைத்தடுத்தல்போல் ஆணவம் ஆன்மாவின் இச்சாஞானக்கிரியா சத்திகளைத் தடுக்கும்.

235. ஆணவம் அசுசியாய்த் துக்கமாயிருக்கிற விடயபோகங்களில் ஆசையை மூட்டுவிக்கும்.

236. ஆணவமலம் மூலமலமென்றும் சகசமலமென்றும் சொல்லப் படும். அநாதி கேவல நிலையில் (ஆன்மாக்களுக்கு) ஆணவமே தேகமாய் இருக்கும். அந்நிலையிற் கன்மம் அதிசூக்குமமாய் அடங்கிநிற்கும்.

237. செம்பிற்களிம்பு ரசகுளிகையினால் அடங்கிக் காணுதல்போல் சிவஞானத்தால் ஆணவமலசத்தி குன்றிவிடும். மீண்டும் அவ் வான்மாவை அது பந்திக்காது.

## கன்மம்

238. கன்மமெனினும் வினையெனினு மொக்கும் அது யான் என்கின்ற செருக்கா லுண்டாகும். அச்செருக்கிற்கு ஆணவம் காரணமாம்.

239. வினை நல்வினை யென்றும் தீவினையென்றும் இருவகைப்படும். மனவாக்குக்காயங்களால்தான் நல்வினை தீவினைவரும். மனவா

க்குக்காயங்களால் நல்வினை தீவினைபோகும். இது வௌவால் இறைதின்ற வாய்வழியே புழுக்கைபோடுமாறுபோ லென்க.

240. பொன்விலங்குபோல் நல்வினையாம், இருப்பு விலங்குபோலத் தீவினையாம், நல்வினைக்கும் பிறப்புண்டு தீவினைக்கும் பிறப்புண்டு.

241. நல்வினைக்குத் தீவினையாவது தீவினைக்கு நல்வினையாவது ஈடாய் நில்லாது, அதை-அதை அனுபவித்தேதீரவேண்டும், ஈண்டு நல்வினை பசுபுண்ணியம். நல்வினைக்குச் சொர்க்கமும் தீவினைக்கு நரகமும் பலனாக வரும்.

242. நல்வினையை அனுபவிக்கமாத்திரமே சொர்க்கமும், தீவினையை அனுபவிக்கமாத்திரமே நரகமும் ஏற்பட்டிருத்தல்போல் நல்வினைதீவினைகளைக் கலந்து அனுபவித்தற்கு இவ்வுலகம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால்தான் இதைக்கன்மபூமி யென்பார்.

243, இத்தேகம் இருவினைகளுக்கும் ஈடாகவந்தது. ஏற்பட்டவினைகளை அனுபவித்தவுடனே இத்தேகம் நீங்கும், பலபிறவிகளினின்றும் மானிடதேகத்துக்கு வருதல் ஏழுகடலையும் கையால் நீந்திக் கரையேறுதலை ஒக்கும்.

244. வினைபக்குவப்படுதலுண்டு. அப்படிப்பக்குவப்பட்டவினையை அனுபவித்ததற்காக ஆன்மாக்களை இறைவன் தேகத்தோடு கூட்டுவான்.

245. கீரைவிதையையும் பனங்கொட்டையையும் ஒரேநாளிற் பூமியிற்போட்டால் கீரை முந்தியும் பனை பிந்தியும் பலன் கொடுக்கும். அதாவது வினையின் மென்மை வன்மைக்குத்தக்கபடி முன்பின் பலன் கொடுக்கும்.

246. ஒரு அரசனால் சொல்லிய சட்டப்படிநடப்பது நன்மையைத் தரும், மீறி நடப்பது தீமையைத்தரும். அதுபோல வேதாகமங்கள் சொல்லியபடி நடத்தல் நன்மையாம், அதைக்கடந்து நடத்தல் தீமையாம்.

247. நாம் இப்போது செய்யும் இருவினைகளுக்கு ஆகாமியம் என்று பெயர், நம்மால் அனுபவிக்கப்படாமல் எஞ்சிக்கிடக்கிற புண்ணிய பாவக் கூட்டத்திற்குச் சஞ்சிதமென்று பெயர்.

248. நாம் இப்போது அனுபவிக்கிற நல்வினை தீவினைகளுக்குப் பிராரத்துவம் என்று பெயர்.

249. சஞ்சிதம் நெற்களஞ்சியத்துக்கும், பிராரத்துவம் அக்களஞ்சியத்திலிருந்து கொஞ்சம் எடுத்துச்சாப்பிடுவதற்கும், ஆகாமியம் மீண்டும் பயிர்செய்து நெல்விளைத்தற்கும் ஒக்கும்.

250. கன்மம் ஜடம். ஆணவமுள்ளவன்றே கன்மமுமுண்டு. ஆணவம் அநாதிநித்தியம். கன்மமும் அப்படித்தான்.

251. நல்வினை தீவினையில் விருப்பம் ஆணவத்தாலுண்டாம். அவ்வாசையை நிறைவேற்றுகிறவன் கடவுள்.

252. வினைகள் புத்திபூர்வமாயும், அபுத்திபூர்வமாயும் வரும்.

253. வினைகளுக்கு ஸ்தூலகன்மம் என்று பெயர், அவைகளாலுண்டாகும் புண்ணிய பாவங்களுக்குச் சூக்கும கன்மம் என்று பெயர். இவைகளுக்குப் பலனாய் வருகிற இன்பதுன்பங்களுக்கு அதிசூக்கும கன்மம் என்று பெயர்.

254. உமியைப்போலும் மாயை. தவிட்டைப்போலும் ஆணவம். நென்முளையைப்போலுங் கன்மம்.

255. பிராரத்துவம் ஒரு ஆன்மாமூலமாயும்வரும், பஞ்சபூதங்களின் மூலமாயும்வரும், தெய்வத்தினாலேயும் வரும். இவை முறையே ஆதி ஆத்மிகம் ஆதி பௌதிகம் ஆதி தெய்விகம் என்று சொல்லப்படும்.

256. சஞ்சிதம் குரு கிருபையால் போம், ஆகாமியம் நிட்டையால் போம், பிராரத்துவம் தேகத்தோடு போம். ஒருவனுக்குரிய ஆகாமியம் மற்றொருவனுக்கும் பிராரத்துவமாய் நடைபெறும்.

257. நிலம் பக்குவப்படுதற்காகப் பயிர்செய்யாமல் நிலத்தைப் போட்டிருப்பதுபோல வினை பக்குவப்படுதற்காகச் சர்வசங்காரம் ஏற்பட்டு ஒருகால எல்லைவரை பிரபஞ்சம் தோற்றாதிருக்கும்.

258. நாம் அலைவாய்த் துரும்புபோல வினையால் மொத்துண்டு ஆங்குமிங்கும் அலைப்புறுகிறோம்.

259. எறும்புள் அகப்பட்ட நாங்கூழ்ப்பூச்சிபோல நாம் இருவினைத் தொடக்கில் அகப்பட்டுத் துன்புறுகிறோம்.

260. ஒருநெல் பலநெல்லாய் விளைவதுபோல ஒருவினையும்பல வினைகளுக்குக்காரணமாயிருக்கும்.

261. யானையின் மணிஓசை யானை வருதலை முன்னமே தெரிவித்தல்போல நமக்கு வரக்கூடிய நன்மை தீமையின் அறிகுறி முன்னமே தோற்றும்.

262. கன்மம் வியாபகமாய் ஆன்மாக்கள்தோறும் வெவ்வேறாய் நிற்கும், அது சங்கிலிபோலத்தொடர்ச்சியாயும் பிரவாகத்தில் அலைபோல ஒன்றின்பின் ஒன்றாயும் வரும்.

263. சஞ்சிதவினை ஆறு அத்துவாக்களிலும் கட்டுப்பட்டிருக்கும். அது அழிந்தும் ஆகியும்வரும். தீக்ஷையில் இவ்வாறு கட்டுப்பட்ட வினை குருவால் சோதிக்கப்படும்.

264. கன்மம் சிருஷ்டிகாலத்தில் காரியப்பட்டு நிற்கும்.

265. ஆணவத்தின் எட்டுக்குணங்களோடு சேர்ந்த ஆன்மாக்களின் அறிவிச்சைதொழில்களாலே கன்மம்உண்டாம். அது வந்தணுகுவதற்குமுன் காணக்கூடாததலால் அதிருஷ்டமென்று அழைக்கப்படும்.

266. கன்மம் பரிகாரத்தாலும் அனுபவத்தாலும் தொலைக்கப்படவேண்டும்.

267. சிலவினைகளுக்கு இங்கேயேபலன் எய்தும், வேறுசில வினைகளுக்குப் பரத்திலே பலன்கிடைக்கும்.

268. இறைவன் வினைகளை அறிந்து ஊட்டுவிப்பான்.

269. வினையின்வாதனைகள் புந்தியில் பொருந்திநிற்கும்.

270. கன்மம் ஆகந்துகமென்று அழைக்கப்பெறும். ஆகந்துகம்—வந்தேறி.

271. வறுத்தவிதை முளையாதவாறுபோலத் தியானாக்கினியால் தாக்கப்பட்ட சஞ்சிதம் மீண்டும் அநுபவத்திற்கு வராது.

272. மந்திரம், பதம், வன்னம், இவைகளை மதித்து அவைகளுக்குரிய சுரத்தோடு உரைத்தல் உரையாதிருத்தல் இவைகளால் முறையே புண்ணியபாவமுண்டாம். மனம், தத்துவங்களாகிய கருவிகளாற்சென்று உயிர்களுக்கு இதம், அகிதம், செய்தலாலும், புவனேசர்களுக்குரிய பூசைசெய்தல் அல்லது அதற்கு அன்னியமாய்ச்செய்தலாலும், சாத்திரங்களை உண்மையாய் ஓதலாலும், அதனை மறுத்தலாலும் தத்துவம், புவனம், கலை, என்னும் மற்றையமூன்று அத்துவாக்களினும் வினைகள் உண்டாம்; இவையாவும் மனம், வாக்குக், காயம், என்னும் மூன்றினாலேதான்வரும்; நிர்வாணதீக்ஷையில் இவைகள் குருவால் சோதிக்கப்படும்.

273. புத்தி இருவினையின்கண் விசாரித்தறியாது நடுநிலையாகி ஒத்துநிற்றலே இருவினையொப்பு என்று சொல்லப்படும்.

274. இறைவன் இருவினைப்பாசத்திற் கட்டுண்ட ஆன்மாக்களைப், பயிரிடுவோன் கமலைக்காளைகளைத் திரும்பத்திரும்ப அங்குமிங்கும் அடிப்பதுபோலச், சொர்க்கம் அல்லது நரகம் பின்பூமி என்னுமிடங்களுக்குத் திரும்பத்திரும்பவடித்துவிடுகிறுன்.

275. கயிற்றுற் குறுந்தறியிற் கட்டுண்ட ஓர் பசு அக்கயிற்றளவுதான் சுற்றிப் புல் மேய்தல்போல் வினைக்கயிற்றுல் தேகத்திற் கட்டுண்ட வான்மா, தனக்கு நியதிபண்ணப்பட்ட வினையளவுதான் அநுபவிக்கக்கூடும்.

276. தேகத்தினுற் செய்த கன்மத்துக்குப்பெயர் காயிகம், வாக்கினுற்செய்த கன்மத்துக்குப்பெயர் வாசிகம், மனத்தாற்செய்த கன்மத்துக்குப்பெயர் மானதம். ஆகவே கன்மம் வரும் வழி மூன்றையுமறிந்துகொள்க.

277. ஒரு ஆன்மாவிற்கு இன்பதுன்பம் மாறி மாறி வருமே தவிர ஒரே படித்தான அநுபவமிராது.

278. ஜாதி, ஆயுள், போகம் கன்மத்திற்குத் தக்கவாறு ஏற்படும்.

279. தொன்று தொட்டுக்கன்மம் வருவதால் அது பிரவாகவநாதி

யாம். பிரவாகம் - வெள்ளம். கன்மமநுபவித்துத்தொலைத லால் நாசமுடையது.

280. கன்மம் நித்தியமாய் வியாபகமாய்ச் சகசமாயிருக்கும்.

281. அத்துவாக்கள் மூவகைப்படும். அவையாவன. சுத்தாத்துவா மிசிராத்துவா அசுத்தாத்துவா என்பனவாம். பின்னிருஅத் துவாக்களின் வினைகள் அங்கங்கு கட்டுப்படும். சுத்தாத்து வாவிற்குச் சதாசிவமும் மிசிராத்துவாவிற்கு அனந்தேசுவர ரும் அசுத்தாத்துவாவிற்கு உருத்திரரும் கர்த்தாக்களாவர்.

282. கன்மம் தன்மாதன்ம ரூபமாயிருக்கும். பிரளயகாலத்திற் பக் குவப்படும். சங்காரகாலத்தில் மாயையிலே யிருக்கும். சிரு ஷ்டிகாலத்தில் தேகாதிகளுக்கு ஏதுவாயிருக்கும்.

283 கன்மம் போக்கியம் என்றழைக்கப்பெறும். ஆன்மா போக்தா. அவன் அநுபவம் போகம்.

284. சுத்தாத்துவாவிற் கன்மாநுபவமில்லை. பிரளயா கலருக்குச் சுத் தாத்துவாவிற் றேகமும் மிச்சிராத்துவாவிற் கன்மாநுபவமு முண்டு. பிரளயாகலர் மிசிரமாயையிற்றானிருப்பர்.

285. சகலருக்கு அசுத்தாத்துவாவிற் றேகமும் கன்மப்புசிப்புமுண் டு. ஆணவம் சிறிது நீங்குதற்பொருட்டு மிசிராத்துவாவிற் கலாதிகளும் பொருந்தும்.

286. ஆன்ம அறிவு எந்தத் தத்துவத்தைப் பொருந்தி நின்று கன் மஞ் செய்ததோ அந்தத் தத்துவத்திற்றான் அக்கன்மம் நிலை பெறும்.

287. சங்காரகாலத்திற் கன்மம் அசுத்தமாயையிலிருக்கும்.

288. கன்மம் ஆத்மதன்மமும் மாயாகாரியமுங் கூடின விடத்தில் தோற்றும்.

289. கன்மத்திற்கு மாயையும் ஒருவகை காரணமாம்.

290. கன்மம் சிவபுண்ணிய முதிர்ச்சியினுற் பரிபாக மடையும்.

291. சிவன் முத்தர்க்குத் தேகமுள்ளளவும் பிராரத்துவமுண்டு. ஆனால் அவர்கள் சிவத்தோடு ஒன்றிநிற்றலால் அதிற்றொடக்குண்ணார்கள். அவர்களுக்கு ஆகாமியமும் ஏறாது.

292. ஒருவன் செய்த கன்மம் மற்றொருவனைப்போய்ப் பொருந்தாமற் பசுவின் கன்றுகள் அவிழ்த்துவிட்டவுடன் தன் தன் தாயைப் பற்றிக்கொள்வதுபோல அவனவனைப்போய்ப் பற்றி நிற்கும்.

293. மருந்தெண்ணெய் வாசனைபோல் கன்மம் சித்தத்தில் வந்து தோன்றும். சித்தம்—ஆன்மஅறிவு.

## மாயை

294. வித்துக்கு ஆதாரம் நிலமாயிருத்தல்போல் மாயைக்கு ஆதாரம் இறைவனது சத்தியாம்.

295. நிலங்குளிர்ந்துழி வித்தினின்று அங்குரந்தோன்றுவதுபோல் உலகம் இறைவனது சத்தி சங்கற்பித்தவழி தோன்றும்.

296. வித்துக்கள் காரிற்றோன்றி வேனிலில் அடங்குமாறுபோல் உலகமும் ஒருகால் மாயையிற்றோன்றி மற்றொருகாலத்தில் அடங்கும்.

297. முயற்கோடுபோல இல்பொருள் எக்காலமுந்தோன்றாது. ஆதலால் உள்ளதே தோன்றும், உலகந்தோன்றலால் அது ஒரு உள்பொருள், மித்தையன்றென்றுணர்க.

298. கன்மமலம் பக்குவமாதற்பொருட்டு உலகம் ஒடுங்கும்; ஆணவமலம் பரிபாகமாதற் பொருட்டு அது மீளவுமுண்டாம்.

299. பிரபஞ்சம் சங்காரகாரணனாகிய உருத்திரன் மாட்டொடுங்குதலால் மீண்டும் அவனிடத்தில் நின்றுதான் அது தோன்றும்.

300. வினை பலவிதமாதலினால் உயிரையும் பலவேறு வகைப்பட இறைவனது சத்தி சங்கற்பித்துநின்றது.

301. கிழங்கினின்று தோன்றிய தாமரையைப் பங்கயமென்று கூறுதல்போல் மாயையில் நின்று தோன்றிய உலகை ஈசுவரனிடத்தினின்று தோன்றியதென்பார்.

302. மாயையும் உலகமும் முறையே வித்தும் அங்குரமும் போலாம். உலகிற்கு முதற்காரணம் மாயை அது ஜடம்.

303. பிரபஞ்சப்பொருள்கள் அருவப்பொருள்களென்றும் உருவப் பொருள்கள் என்றும் இருவகைப்படும்.

304. மாயாதத்துவங்கள் ஒரு சமுத்திரம் போலாம்.

305. பலதேசங்கள் கூடினது ஒரு கண்டம், பலகண்டங் கூடினது ஒரு உலகம், பல உலகங் கூடினது ஒரு அண்டம். அண்டங்களுக்கு அளவில்லை. அவை அத்திக்காய்க் கொத்துப்போலச் செறிந்திருக்கும்.

306. ஒரு சிறு ஆலம்விதையினின்றும் ஒரு பெரிய விருக்ஷம் உண்டாவதுபோல் மாயையிற் சூக்குமமாய் அடங்கிநின்ற உலகம் அதற்குரிய சாதகங்கள் ஏற்பட்டபோது விரிந்து தோன்றி நிற்கும்.

307. யாதொரு காரணமுமின்றி உலகம் காரியமாய்த் தோன்றாது.

308. மஹா சங்கார காலத்திலும் மாயையழியாது. ஆகையால் அது அநாதி நித்தியம்.

309. தங்கம் ஒன்றே செய்வோன் வினைகளால் பல பணியாயினாற் போல் மாயை யொன்றே இறைவன் கூட்டும் வினையினால் பல பேதப்படும். இம்மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாம்.

310. மாயையானது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூன்றுவகைப்படும். இவை முறையே விந்து மோகினி மான் என்று அழைக்கப்பெறும்.

311. சுத்தமாயைக்கு மஹாமாயை, குடிலை, ஓங்காரம், முதலியபல நாமங்களுள.

312. அது நித்தியமாய் ஒன்றாய் ஜடமாய் சுத்தமாயுள்ளது.

313. அது ஒலிரூபமுள்ளது.

314. நாதம், பரம் அபரம் என்று இருவகைப்படும். பரநாதம் சிவத்திற்கிருப்பிடம்; அபரநாதம், இறைவனது சத்தியால் மஹாமாயையில் த்துவனிரூபமாய் உண்டாக்கப்படுவது. த்துவனி-நாதம்.

315. விந்துவும் பரவிந்து அபரவிந்து என்றிருவகைப்படும். பரவிந்து சத்திக்கிருப்பிடம், அபரவிந்து ஸ்வரம், வர்ணம், கலைமுதலாயின தோற்றி யொடுங்குமிடம்.

316. சுத்தமாயையிலும் சுத்தகாலமுதல் சுத்த நிலம் வரையில் 31 தத்துவங்களுள்ளன. சிவதத்துவம் 5 ம் சேர்ந்து தத்துவம் 36ஆம்.

317. ஈண்டும் சுத்தாத்துவா ஆறு உண்டு (1) கலை ஐந்து (2) மந்திரம் பதினொன்று (3) பதம் எண்பத்தொன்று (4) புவனம் 224 (5) தத்துவம் 36 (6) வன்னம் 51 இவை சூக்குமநாதரூபமாயுள்ளன.

318. சுத்தமாயையினின்று தோன்றுமவைகளைத் தத்துவவியலிற் கண்டுகொள்க.

319. சுத்தமாயையிலுள்ள புவனநாதாக்களுக்கும் விஞ்ஞான கலர்க்கும் அம்மாயை தநுகரணபுவனபோகங்களாயிருக்கும். சுத்தபுவனம் 33 அசுத்தபுவனம் 191.

320. சுத்தமாயையில் ஆனந்தகோசம் விஞ்ஞானகோசம் தோன்றும். சுத்தா சுததமாயையில் மனோமயகோசம் தோன்றும் அசுத்தமாயையில் பிராணமயகோசம் அன்னமயகோசந்தோன்றும்.

321. வேதம் அநாதி நித்தியம். அநாதி நித்தியரிடத்திலிருந்து வந்ததாலென்க .இதுவும் சுத்தமாயையிற் றோன்றிற்று.

322. மந்திரங்கள் பதங்களிலும், பதங்கள் வன்னங்களிலும், வன்னங்கள் புவனங்களிலும், புவனங்கள் தத்துவங்களிலும், தத்துவங்கள் கலைகளிலும், கலைகள் சத்திகளிலும், சத்திகள் சிவத்திலும் ஒடுங்கும்.

323. சிவதத்துவங்கள் முதலான சுத்த தத்துவங்கள் ஐந்தும் சுத்தமாயையினின்ற தோன்றிற்று.

324. சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நாலுவாக்குகளும் சுத்தமாயையினின்று உண்டாயின. இவைகளுள்வைகரி வாக்கு மிக ஸ்தூலமாய் நின்று காதினாற் கேட்கப்படும்.

325. சூக்குமை வாக்கு சுத்தாத்துவ வாசிகளுக்குப் பந்தமாகும்.

326. சத்தி தத்துவத்தில் சூக்கும நாதமும் விந்துவுமிருக்கின்றன.

327. சதாசிவ தத்துவத்தில் ஸ்தூலநாதமும் விந்துவுமிருக்கின்றன.

328. ஈசுவர தத்துவத்தில் சூக்கும வர்ணங்களோடு கூடிய அநந்தேசுவராதிகளிருக்கிறார்கள்.

329. வித்தியாதத்துவத்தில் ஸ்தூலவர்ணங்களோடு கூடிய சப்த கோடி மஹாமந்திரங்கள் (28) சிவாகமங்கள் இருக்கின்றன.

330. மாயாமயமான சகல உலகத்தையும் குண்டலினி சத்தி தாங்குகின்றது. இது ஜடம் ஆனால் கிரியாசத்தியாலதிட்டிக்கப்பட்டிருக்கும்.

331. ஐந்துகலைகளும் சுத்தமாயையினின்றும் உண்டாயின. இவைகள் ஆன்மாவின்கண் மலமறைப்பை நீக்கும். அவை எங்கும் வியாபித்திருக்கும்.

332. கலைக்குக் கருவிவித்தை. அது ஆன்மாவில் ஞானசத்தியைப் பிரகாசிப்பிக்கும். ஞானசத்திக்கு விஷயங்களில் ஆசையுண்டாக்குவது அராகம்.

333. வித்தை ஆன்மாவின் அந்தரங்ககருவி. புத்தி இந்திரியங்களால் வெளிவிஷயங்களைக் கிரகிக்கும் கருவி.

334. மாயை அராகத்தின்வழியாய் ஆன்மாவை மயக்கும். அராகம்-ஆசை.

335. காலம் மாயையிற் பிறக்கும். அது மூன்று வகைப்படும்.

336. நியதி அவரவர் சுகதுக்கங்களை நியமனஞ்செய்து நிற்கும்.

337. கலை வித்தை அராகம் காலம் நியதி இவை அஞ்சும் ஆன்மாவிற்கு ஐந்து சட்டைகளாம். ஈண்டு ஆன்மாவைப் புருஷதத்துவமென்பார்கள்.

338. இது சகலருக்கன்றி மற்றையருக்கின்று.

339. புருஷதத்துவத்தை யடைந்தபோது கன்மங்களைப் புசிக்கும் வல்லவனாகிறான். அதற்கு முன்னில்லையாமென்க.

340. குணம் புருஷனுக்குப் போகசாதனமாம். அது மூன்றுவகைப் படும். கலையிலே மூலப்பிரகிருதி தோன்றும்.

341. குணங்கள் பிரகிருதியல்ல, ஆனல் முக்குணங்களும் பிரகிருதி யிலடங்கி நிற்கும்; அப்பொழுது அவ்வியக்தமாம். இதில் சித் தந்தோன்றும்.

342. முக்குணங்களும் சூக்குமதேக வழியாய் ஆன்மாவை வியாபிக் கும்.

343. புத்தி முக்குணமயமாயிருக்கும் (அ) வகை பாவங்களும் புத்தி யில் வாசனரூபமாயிருக்கும்,

344. அகங்காரத்தால் தத்துவங்கள் விஷயங்களில் பிரவர்த்திக்கின் றன.

345. மனம் இந்திரியங்களுக்கு விஷயப்பிரவர்த்திசெய்யும்.

346. அகங்காரம் தைஜஜம் வைகாரிகம் பூதாதி என்று மூன்று வகைப்படும்.

347. சாத்துவிககுணத் தைசசாவகங்காரத்தில் மனம் ஞானேந்திரி ய மிரண்டுமுண்டாம்.

348. இராசதகுண வைகரிகா அகங்காரத்தில் கன்மேந்திரியமும் பௌதாதிக அகங்காரத்தில் தன் மாத்திரைகள் ஐந்தும்தோ ன்றும்.

349. தாமதகுண சம்பந்தமான தன் மாத்திரைகள்ஐந்திலும் ஐந்து பூதங்கள் தோன்றும்.

350. சுத்தமாயை வேறு அசுத்தமாயை வேறு.

351. சுத்தவித்தை முதல் சிவதத்துவம்வரை சுத்த தத்துவம். ராக முதல் காலம்வரை சுத்தா சுத்தம். மோஹம் சிறிது நீங்கிஇரு த்தலால் சுத்தமென்றும் சூக்குமதேகத்தின் வழி பெத்தான் மாவிற்குச் சுகதுக்கங்களை உண்டாக்குவதால் அசுத்தமென் றும் சொல்லப்படும்.

352. பிருகிருதி முதல் பிருதுவி வரை அசுத்தமாம்.

353. பிரளயாகலருக்குரிய அவ்வியக்த புவனங்கள் சரீரங்கள் அசு-

த்தமாயையிலிருக்கின்றன. விஞ்ஞானகலருக்கு அவை மஹா மாயையிலிருக்கின்றன.

354. பிரளயத்தில் தேகாதி யில்லாத ஆன்மாக்களுக்கு கலாதி தத்துவங்கள் தூலசூக்கும தேகங்கள் உண்டாக்குதற்கு ஆதாரம் அசுத்தமாயை.

355. அசுத்தமாயை கன்மத்திற்கிருப்பிடமாயுள்ளது. அது நித்தியமாய் ஒன்றாய் வியாபகமாய் அசத்தாயுள்ளது.

356. ஒரு இராச்சியத்தை ஆளுவதற்குச் சட்டங்கள் ஏற்பட்டிருப்பதுபோல ஆன்மாக்கள் நல்வழி நடப்பதற்குக் கடவுள் வேதாகமங்களை அருளிச்செய்திருக்கிறார்.

357. வேதாகமங்கள் சதாசிவமூர்த்தியின் ஈசானமுகத்தின் கண்ணுள்ள ஐந்து திருமுகங்களினின்றும் உண்டாயின.

358. பசு நூல்களைக்கல்லாமல் இவ்விரு சிவநூல்களையே கற்று அவ்வாறே கருமங்கள் செய்து முடித்தல்வேண்டும்.

359. வேதம் சொன்ன இறைவன் தன்னையே புகழ்ந்து அவ்வேதத்தில் துதித்தில் ஆன்மாக்களுக்குத் துதிக்கு முறைகாட்டுவித்தற்கென்க.

360. புருஷதத்துவம் தத்துவமல்ல ஆதலால் புவனங்கிடையாது.

361. அசுத்தமாயா பதார்த்தங்களைச் சுத்தமாயா மந்திரங்களே சுத்திபண்ணத் தகுதியுடை யனவாம்.

362. தேகங்கள் மூன்று வகைப்படும் ஸ்தூலம், சூக்ஷமம், காரணம் என்பனவாம்.

363. மாயாதனு ஒரு விளக்குக்குச் சமானமாயிருக்கின்றது. பூதங்களைந்தும் பஞ்சீகரணமாய்க்கலந்து நின்றால் காயம் உண்டாம். சத்த பரிச ரூப ரச கந்தங்கள், மனம் புத்தி ஆங்காரம் இவை எட்டும் கூடினது சூக்ஷம தேகமாகிய புரியட்டக சரீரமாம்.

364. சூக்கும சரீரத்திலிருந்து ஆன்மாவிற்கு உலகில் பூதசரீரமும் சொர்க்கத்தில் ஆன்மாவிற்குந் தேவர்கட்கும் பூதசார சரீரமும் உண்டாம்.

365. ஆகாயத்தினின்று வாயுவாதி தோன்றவில்லை. ஆனால் ஆகாயம் மண்ணாதிகளுக்கு அவகாசமாய் நிற்கும். அவகாசம்—தங்குமிடம்.

366. மனிதர்களுக்குள் ஒன்பதுலக்ஷ யோனிபேதம் அவரவர்கள் குணங்களை வைத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

367. சரீரமாகிய விருக்ஷத்திற்கு மாயை நிலைவேர், புண்ணியபாவங் கிளைவேர்.

368. காலனாகிய தச்சன் தேகங்களாகிய மரங்களை வெட்டுவான்.
குறிப்பு:— மற்றைய பிறவிகளைத்தாண்டி மானுடதேகத்துட்பொருந்தல் எழுகடலையும் நீந்திக் கரையேறுதலை யொக்கும்.

369. தேகம் வெயிலில் வைத்த வெண்ணெய்போலும் நீரின்குமிழி போலும் நிலை நில்லாது. ஆதலால் தேகம் உள்ளபோதே உய்யுமாறறிந்துகொள்க.

370. தேகமாகிய மரத்தில் இறைவன் ஆன்மா என்கிற இரண்டு பக்ஷிகள் வசிக்கின்றன. ஒருபக்ஷி இன்பதுன்பங்களை அனுபவிக்கின்றது. மற்றொன்று சாக்ஷியாகப்பார்த்துக்கொண்டிருக்கிறது.

371. பாவிடை ஆடு குழல்போல மீண்டும் மீண்டும் தேகமெடுத்துப் பிறந்து கஷ்டமடைகிறோம்.

372. இத்தேகம் வாத பித்த சிலேட்டுமங்களாகிய திராவகங்களையும், நரம்பு மச்சை முதலிய தந்திகளையும், இரத்தாசய முதலிய பாத்திரங்களையும், மூலாதாரமுதலிய அக்கினிக்குண்டங்களையும் உடைத்தாயிருக்கிற ஒரு யந்திரத்திற்குச் சமமானதென்று சொல்லலாம்.

373. ஒரு பாம்பு தனது தோலைக்கழற்றிவிட்டுப் போவதுபோல் ஆன்மா தூலதேகத்தை விட்டுப்போம். குடாகாய உவமை சூக்கும உடம்பைவிட்டு ஆன்மா போவதற்குச்சொல்லலாம்.

374. ஒன்பது கோட்டைவாயிலுள்ள இவ்வுடலத்துள் இருக்கும் ஆன்மா குறித்தகால எல்லைவரை வெளிப்பிரவேசியாதிருத்தல் யாவருக்கும் ஆச்சரியத்தைக்கொடுக்கும்.

375. கன்மம் பலவிதமானதால் சரீரங்களும்பலவிதமாம். கண்ணாடியில் கண்டவிம்பத்திற்கு யாதொரு செயலுமில்லாதவாறுபோல் ஆன்மாவால் ஆட்டப்பட்ட உடலுக்கு யாதொருசெயலுமில்லை.

376. அந்தக்கரணங்கள் அரசருக்கு அமைச்சர் அணுகி நிற்றல்போல ஆன்மாவிற்கு அணுகி நிற்கின்றன.

377. கறங்கோலை கடற்றிரைபோல் நமது நினைப்பும் மறப்பும் மாறிமாறி வருகின்றன.

378. ஒருநதி ஐந்து பிரிவுகளை யுடைத்தாயிருந்தாலென்ன ஆன்ம அறிவு பஞ்சேந்திரியங்களின் வழியாய் ஐந்து பிரிவுபட்டுச் செல்லுகின்றது.

379. ஐம்பொறிகளுள் ஒன்றறிந்ததை ஒன்றறியாது, ஒன்று அறியும்போது ஒன்றறியாது.

380. மாயையின் சம்பந்தம் சகலாவஸ்தை. ஆணவசம்பந்தம் கேவலாவஸ்தை.

381. பகற்காலத்தில் காகம் கூகையைவெல்லும். இராக்காலத்தில் கூகை காகத்தைவெல்லும்; அதுபோல கேவலத்தைச் சகலம் வெல்லும் சகலத்தைக் கேவலம் வெல்லும்.

382. வெண்மையாகிய வைரம் மற்ற இரத்தினங்களை அறுப்பதுபோல் சாத்துவிககுணமே மற்றைய குணங்களைக்கெடுக்கும்.

383. திரோதானமலம் ஈசனுடைய அருட்சத்தி. அது பெத்தகாலத்தில் ஆன்மாக்களோடு மறைந்துநின்று ஆணவமலம் நசிக்கும்படி காரியப்படுத்தும், பின் முத்திகாலத்தில் அருட்சத்தியாய் நின்று ஆன்மாவிற்குப் பேரின்பமளிக்கும், இது மறைந்து காரிய நடத்தலால் இதையும் மலமெனக் கூறப்பட்டது.

ஆறவது பாசவியல் முற்றிற்று.

# ஏழாவது சாதனவியல்.

388. கல்வியே சிற்றுயிர்க்குற்றதுணை. அன்னப்பக்ஷி நீரைப் பிரித்துப் பாலைக்குடிப்பதுபோல ஆராய்ந்து அமைவுடைய நூல்களைக்கற்றறிந்து அவ்வாறு ஒழுகல் வேண்டும். அவ்வொழுக்கமே விழுப்பந்தரும்.

385. தேன் ஈக்கள் பலநாளும் தேனைப் பல இடங்களினின்றுஞ் சேர்த்துத் தங்கள் கூட்டில் வைப்பது போல நீ பலநாளும் சாத்திரஞானத்தின் சத்தைச் சேர்த்து உன்மனக் கூட்டில் வைத்துக்கொள்.

386. சாத்திரத்தையே விடாது படித்தல் தாகத்துக்குக் கடற்சலத்தைச் சாப்பிடுகிறது போலும்.

387. ஒரு பள்ளிக்கூடத்துள் மாணுக்கர் அறிவிற்குத் தகுந்தவாறு பல வகுப்புகள் ஏற்பட்டிருப்பது போல அறிவிற்குத் தகுந்தவாறு மத வகுப்புகளும் ஏற்பட்டிருக்கின்றன.

388. எல்லாமத வாதிகள் நிலையும் 36 தத்துவங்களுள் அடங்கித் தானிற்கும். அந்நிலைபின் ஏற்றத்தாழ்வு கண்டு மேல் கீழென வகுப்பார்கள்.

389. பஞ்சபூத வாதிகளினும் அந்தக்கரணவாதிகள் பெரியோர்; அவர்களினும் ஆன்மவாதிகள் பெரியோர்; அவர்களினும் ஈசுர வாதிகள் பெரியோர்.

390. நாஸ்திகம்பேசி நாத்தழும்பேறு மவர்பாற் செல்லலாகாது. ஈசுவரனில்லை யென்று சொல்லுஞ் சொல்லே அவர் ஒருவர் உண்டு என்னும் தாற்பரியத்தைக் கொடுக்கா நிற்கும்.

391 மற்றைய ஆஸ்திக சமயங்களுள் விரோதம் விளைத்தல் சகோதரர்களுள் கலகம் விளைத்தல் போலாம்.

302. விரிவில்லா அறிவினர்கள் வேறொரு சமயந்தன்னை யாதாமொரு மனப்புழுக்கத்தால் நூதனமாய் ஏற்படுத்தினராயி

னும் அதுவும் உண்மைச் சமயத்தின் வகுப்புகளில் அடங்கி நிற்குமே தவிர வேறன்று.

393. யானை கண்ட குருடர்போல ஒவ்வொருவரும் தங்கள் தங்களுணர்ச்சியிற் கண்டவற்றை யுண்மையென்று கொண்டு நடக்கிறார்கள். ஆனால் அவர்கள் கண்டது அற்பபாகமே தவிர வேறன்று.

394. சமயமென்றால் நிலை தருணம் என்று பொருள்படும். 36 தத்துவங்களுள் யாதானும் ஒரு நிலையில் ஒரு வாதி நின்றால் அவன் அச்சமயி என்று அழைக்கப் பெறுவான்.

395. சமயங்கள், அகச்சமயங்கள், அகப்புறச் சமயங்கள், புறச்சமயங்கள், புறப்புறச்சமயங்கள், என்று பலவகைப்படும். இவை கடந்த அதீதசமயம் சித்தாந்த சைவமொன்றே.

396. உட்சமயத்தாருக்குக் கிரமத்தில் முத்திவருமேயன்றி எடுத்த தேகத்தில் கிட்டாது.

397. வேதங்களிற் கூறிய பொருளை நினைத்துச் செய்யாது ஸ்மிருதி விதிபின்படி யாகம் முதலியன செய்தால், முத்திகிட்டாது. ஆனால் தேசக்ஷேமமுஞ் சொர்க்கமுங் கைகூடும்.

398. நால்வகைச் சாதிக்கு விதிக்கப்பட்ட ஒழுங்கில் நடக்கவேண்டும்.

399. பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நால்வகை ஆச்சிரம முறைப்படி நடத்தல் வேண்டும்.

400 மிருகங்கள், பக்ஷிகள் முதலியவற்றுள் பிறவுயிரைக் கொன்று தின்னுதவைகளுள்ளன. பிறவுயிரைக் கொன்றுதின்னுகிற மனிதர்கள் அம்மிருகங்கங்கள் பறவைகளுக்குக் கீழ்ப்பட்டவர்கள் தான். அவர்கள் வயிறே அம்மிருக முதலியவற்றிற்குச் சுடுகாடாம்.

401. இல்லற நின்றுஒழுகுவோருள்ளும் உள்ளத்துறவுடையாருளர். துறவறத்தாருள்ளுங் கள்ளத துறவுடையாருளர்.

402. கல்லை உரக்க வீசினாலும் பைய வீசினாலும் அது தரையிற்றா ன் விழும். அதுபோல் துறவறத்தில் நின்று வெயில் காற்று முதலியன கருதாது அரிய தபசு செய்தாலும், இல்லறத்தில் விதி வழாது ஒழுகிப் பஞ்சாக்ஷரங்களை விதிமுறை செபித்தா லும் அடையும நிலை ஒன்றுதான்.

403. இருடிகள் நாயன்மார்கள் முதலியோரிற் பலர் இல்லறத்தினி ன்று தான் முத்தியடைந்திருக்கிறார்கள்.

404. இல்லறம் வழுவாது நடந்தால் இல்லறம் மேன்மைதான். துற வறம் வழுவாது நடந்தால் அது மேன்மை தான். ஆதலால் இவைகளுள் எது பெரியதென்று விசாரித்தல் கூடாது.

405. இல்லறந் துறவறங்களுள் யாதானும் ஒரு அறத்தைக் கைக் கொண்டு சகலவித கலைக்ஞானங்கள், வேதாங்கங்கள், வேத ங்கள், புராணங்கள் வேதாந்தங்கள் முதலியவைகளைத் தெளி ந்தால் வேதாந்த மென்னு மரத்திற் பழுத்த கனிரசமாகிய சித்தாந்த ஞானங்கைவரும்.

406. வேதாந்த உண்மைப் பொருளும் ஆகமாந்த மென்னும் சித்தாந் தப் பொருளும் ஒன்றேயாம்.

407. சித்தாந்த ஞானம் நித்திய நின்மலஞானமாம். மற்றவை பசு ஞானிகளால் ஏற்படுத்தப் பட்டமையால் நின்மலமாகா.

408. யார் யார் எவ்வகை நூல் செய்தாலும் யாவும் வேதாகமங்க ளின் கருத்துக்களைத்தழுவி நிற்குமேயன்றி வேறன்று. ஏன் னென்றால் இவைபிரண்டும் ஈசனால் அருளிச் செய்யப்பட்ட முதல் நூல்கள். வேதம் பொதுவும் சித்தாந்தம் சிறப்புமாம்

409. சித்தாந்தஞானங் கைவரில் எடுத்த ஜன்மததிலேயே, ஈசன து திருவடி முத்தி கிட்டும். அந்தோ சித்தாந்த நெறி ஒழு காது பிதற்றித் திரிவார் தம் பேதைமையை என்னென்று சொல்லலாம்.

410. ஆன்மாக்களுக்கு முத்தி குருவருளின்றிக் கிட்டாது. குரு வென்றால் அஞ்ஞானத்தை நீக்குவோன், என்றுபொருள்.

411. ஒருமனிதனுக்கு, மற்றொரு மனிதனே உபகாரஞ் செய்யக் கூடுமாறுபோல் ஈசுரனும் ஒருமனிதரூபமெடுத்து வந்து தான் நமக்கு உபகாரஞ்செய்வான்.

412. பக்குவப்பட்ட தாமரை சூரியனைக்கண்டு விரியுமாறுபோல் பக்குவப்பட்ட ஆன்மாக்கள் குருமூர்த்தியின் சன்னிதியிற் பேரறிவு பெறும். பக்குவம் ஈண்டு மலபரிபாகம், அதாவது ஆன்மாவைப் பந்தித்த ஆணவமல சத்தியானது குன்றித் தொழிற்படாது நின்று மீண்டும் அவ்வான்மாவைப் பிறவிக்குக் கொண்டுய்க்காத ஒரு நிலை. இங்கு ஆணவம், விஷம் மருந்தினால் அடங்கி நிற்றல் போலவும் கூட்டிற் சாத்திய வாள் போலவும் செயலின்றி நிற்கும்.

413. சூரியகாந்தக் கண்ணாடி சூரியனைக்கண்டு அக்கினியைக் கக்குதல் போலக் குருசன்னிதானத்தில் பக்குவ ஆன்மா ஞானச்சுடர் வீசி நிற்கும்.

414. வேடர் மானைக் காட்டி மானைப்பிடிப்பது போல ஈசுரன் நம்மைப்போல ஒருதேகமெடுத்து நம்மைவசப்படுத்துவான்

415. ஈசன்மானிட தேகத்தோடு வந்து அருள் புரியவில்லையானால் நாம் கண்ணாடி விட்டில் அடைபட்ட நாய்போலாவோம்.

416. ஆமை நினைத்தலால் சலக்கரையிலிட்ட முட்டைகளைத் தன்னுருவாக்கல் போலக் குருவாகிய சிவனும் நினைத்தலினால் பக்குவ ஆன்மாக்களைத் தன்னுருவாக்குவான்.

417 கோழி தன் பரிசத்தால் முட்டையினின்றும்தன்னைப்போன்ற குஞ்சுகளைப் பொறிப்பது போல ஈசனும் பக்குவ ஆன்மாக்களைப் பரிசித்துத் தன்னைப் போலாக்குவான்.

418. மீன் பார்வையால் தான் பீச்சிய முட்டைகளினின்று குஞ்சுகளைத் தோற்றுவித்தல் போலக் குருவும் அருட்பார்வையாற் பக்குவ ஆன்மாக்களைத் தன்னுருவாக்குவான்.

419. தொட்டால் வாடியென்னும் செடி பரிசத்தால் வாடுதல் போல, குரு பக்குவ ஆன்மாவைப் பரிசித்தால் அவன் வினைத் தொகுதி வாடும்.

420. மாந்திரிகன் கண்பார்வையினால் பிளவைவயை உடைப்பது போலச் சிவகுரு தன் திருநோக்கத்தால் வினைக்கட்டறுப்பான்.

421. மனத்தில் கருடபாவனை செய்து ஒரு மாந்திரிகன் பார்த்தலினால் விஷம் நீங்குதல் போலச் சிவஞான தேசிகன் பார்வையால் ஆணவம் நீங்கும். பரிசத்தால் மாயை அறும். கலா

சோதனையால் சஞ்சித வினை நீங்கும். ஆகாமியம் மூலமல மொழிதலால் நீங்கும். பிராரத்துவம் தேகத்தோடு நீங்கும்.

422. குரு அலையும் மனத்தைச் சித்திரப்பதுமை போலாக்குவான். குரு தான்-ஆன்மாவின் பிறவியை யொழித்து எண்பத்து நாலுலக்ஷத்து யோனி பேதத்திலுள்ள தாய்மார்கள் ஏக்க முறும்படி செய்வான்.

423! குருவைச்சிவமென்று கொள். சிவனைக்குருவென்று கொள்ளாதே,

424. குரு சீடன்பக்குவங் கண்டுதான் வருவார். இவ்வூன் தேகத்தை எப்பொழுது மனம் வெறுத்து நின்றதோ அப்பொழுது தான் பக்குவம் வந்ததென்று அறியலாம். தேகத்தைச் சிறைச்சாலை என்று எண்ணுதவன் பிறவிப்பெருங்கட னீக்தான்.

425. பள்ளத்தில் போகும் ஆற்றுநீர் அதன் அருகிலிருக்கிற நன் செய்களுக்கு நேரே பிரயோசனப்படாமல் வேறு கால் வழியாய் வந்து பிரயோசனப்படுவது போல் ஈசன் நமக்குளிருந்தாலும் அவன் குருமூர்த்தியாய் வந்து தான் நமக்குப் பிரயோசனப்படுகிறுன்.

426. குரங்குக்குட்டி தன்தாயைப் பற்றிக்கொள்வது போலப் பக்குவ சீடர்கள் ஞானகுருவைத் தாங்களே பற்றிக்கொள்ளுவார்கள்.

427. குரு லட்சணமில்லாப் பொய்க்குருவை நீ சார்ந்து நில்லாதே நின்றால் குருடனும் குருடனும் கோல் பிடித்துக் குழியில் விழுந்த கதையாய் முடியும்.

428. தன் தன்மையை உணராதவன் பசு. அவனைக் குருவென்று கொள்ளாதே.

429. பொய்க் குருவை நம்புதல் வெயிலால் தகிக்கப்பட்ட ஒருவன் பனை நிழலை நம்பித் தாபந்தீர இருப்பதை ஒக்கும்.

430. ஒரு ஊருக்குப் போகும் வழியைக்காட்டி மரம் காட்டுவது போலக்குருவும் முத்திக்குப் போகும் வழியைக்காட்டுவார்,

431. குரு பஞ்சமலக்கொத்தை நறுக்கி ஆன்மாவைப் பரமானந்த சாகரத்தில் அமிழ்த்துவார்.

432. குரவர் விரத்தரென்றும் குடும்பியரென்றும் இருவகைப்படுவர். விரத்தரில் பிரமசாரி, மிகச்சிறந்தவன்.

433. மறையோர்-மறையோர், அரசர், வணிகர், சூத்திரர் இவர்களுக்குக்குருவாவர். அரசர்—அரசர், வணிகர், சூத்திரருக்குக் குருவாவர். வணிகர்—வணிகர் சூத்திரருக்குக் குருவாவர். சூத்திரர்—சூத்திரர்க்கும், சங்கரசாதியார்க்கும் குருவாவர். இவ்விதி ஞான குரவர்கட்கன்று.

434. ஞானகுரு சாம்பவதி தீக்கை செய்வான். போதகன் அவுத்திரிதீக்கை செய்வான். சாதகன் கருமதீக்கையினைச் செய்வான்.

435. தீக்ஷை ஞானத்தைக்காட்டி நிற்குமே தவிர மோட்சத்தைக் கொடாது. ஆகையால் ஞானமே மோட்சந்தரும். தீக்ஷையில்லாவிடில் சிவபதமில்லை.

436. பாசத்தைக்குறைத்து ஞானத்தைக்கொடுப்பது தீக்ஷை. அது பலவகைப்படும்.

437. சமயதீக்கைபெற்றுச் சரியையியற்றல் வேண்டும். இதற்குச் சிவலோகம் பயனாய் வரும்.

438. விசேடதீக்கைபெற்றுக் கிரியையாகிய சிவபூசைசெய்யவேண்டும். அதற்குத் தடத்த சிவனதுசமீப இருக்கை பயனாய்க்கிட்டும்.

439. சிவயோகமியற்றித் திதிக்கு ஒழிபாங்காலமுறுமளவுஞ் சிவசாரூப்பியம் பெறுதல் கூடும். ஆசையிலராய்ப் போகத்தில் பற்றொழிவரேல் முத்தி கூடுவர். பற்றுடையராகில் பின்பிறந்து சத்திநிபாத ஞானத்தால் முத்தியெய்துவர்.

440. சரியை கிரியை யோகத்தால் பாவ புண்ணியங்கள் சமமாகும். வினை அனைத்தும் பருவமெய்தும், ஆணவமலம் பரிபாகமாகும், நால்வகைச் சத்திநிபாதம் உண்டாகும்.

441. மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம் என்பவைகளே நால்வகைச்சத்திநி பாதங்களாம். மந்ததரத்திற்குச் சமையமும், மந்தத்திற்கு விசேஷமும், தீவிரத்திற்கு அசத்தியோ நிர்வாணமும், தீவிரதரத்திற்கு, சத்தியோ நிர்வாணமும் செய்தல் வேண்டும்.

442. பொய்வாழ்வில் விரத்தி வரல் மந்தம். அதனை நிலைபடச்செய்தல் மந்ததரம். விஞ்ஞானம் விளக்கிநிற்பது தீவிரம். உபசாந்தி கூடிச் சிவஞான மிகவாக்கல் தீவிரதரம்.

443. சத்திநிபாதமெய்தியவர் சிவன்பாலும் அன்பர்பாலும் தளராத பத்திசெய்வர். விடயத்தின்வழிச் செல்லார். உலகவாழ்வைச்சிறிதாக வெண்ணுவர். சித்திகளைக் கருதார். அருளையே சிந்திப்பார். பாசத்தை மோசிப்பாராரென்று முயல்வார். அப்பொழுது உயிர்க்குயிராய் நின்ற இறைவன் கருணையினால் நம்மைப்போல ஒருதேகமெடுத்துத் தீக்ஷைகள்செய்து வீடு அளிப்பான்.

444. மந்ததரசத்திநிபாதர்க்கு நிவிர்த்திகலை பிரதிட்டாகலையிலடங்கிய வினைகளைச் சோதித்துப் பிரகிருதிக்கு மேலுள்ள புவனங்களில் வைப்பான். மந்தசத்திநிபாதர்க்கு வித்தியாகலை சாந்திகலை சாந்தியாதீதகலை மூன்றையுஞ் சோதித்துச் சுத்தவித்தையினில் வைப்பன். தீவிரசத்திநிபாதர்க்கு சிவசமமாமுத்தியளிப்பன். இவை யாவும் பதமுத்தியே பிரளயகாலத்தில் இவர்களுக்குப் பரமுத்தி கிட்டும்.

445. ஒருபற்று மற்ற தீவிரசத்திநிபாதர்க்குச் சத்தியோ நிருவாணதீக்ஷை செய்து நித்தனுடன் வேறறநிற்கும் முத்தியளிப்பன். குண்டமண்டலாதிகள் மந்திரக்கிரியா பாவனைகள் முதலியவற்றை மனதால் நினைத்துச் செய்தல் சத்தியோ நிருவாணம். சத்தியம்—உடன்.

446. சமயத்திற்கு ருத்திரபதமும் விசேஷத்திற்கு ஈசுரபதமும் கிட்டும். அருகரல்லாதவர்க்கு மேலான தீக்ஷைசெய்தவர் நரகமடைவர்.

447. அதிகமந்தபக்குவமுடையார்க்குக் குருகடாக்ஷித்தால் வாழைத்தண்டில் தீமூட்டுதல் போலாம். மந்தபக்குவமுடையார்க்கு அருளுதல் பச்சைவிரகில் தீ மூட்டுதல் போலாம். தீவிரபக்குவமுடையவர்களுக்கு அருளுதல் கரியில் தீ மூட்டுதல் போலாம். அதிதீவிர பக்குவமுடையவர்களுக்கு அருளுதல் சூடனில் தீ மூட்டுதல் போலாம்.

448. தலையில் அக்கினிபற்றினவன் தண்ணீரைநோக்கி ஓடுவதுபோலும் வெயிலில் வழிநடப்போன் வெப்பம் ஆற்றாது தண்ணிழல் தேடி ஓடுதல் போலவும் பிறவித்துன்பத்தில் வருந்துவர் குருவினது திருவடிநிழல் தேடி ஓடுவர்.

449. ஈசன் அட்டமூர்த்தங்களிலும் வியாபிப்பாதலால் அவைகளினுள் யாதானுமொன்றில்நின்றும் வெளிப்படுவான். பசுவினுடலெங்கும் வியாபித்திருக்கும் பாலை மடுவின் வழியாய்க் கறத்தல்போல ஈசனை ஒரு குறிவழியாகத்தான் கொள்ளல் வேண்டும்,

450. நாம் ஒலிவடிவாகிய எழுத்துக்களை வரிவடிவாகிய எழுத்துக்களால் கண்டறிவதுபோல் அரூபமாகிய கடவுளை அவரால் தோற்றுவிக்கப்பட்ட உருவங்களில் வைத்து அறிகிறோம்.

451. ஒருபடத்தைப்பார்த்தவுடன் அப்படத்தாற் காட்டியமனிதன் செய்கையும் சிறப்பும் தோற்றுமாப்போல் ஈசன்பால் அவசரங்களில் தோற்றிய மூர்த்தங்களைக்காணும்போது அவர் வல்லமையுஞ் சிறப்பும் எளிதிற் றோற்றும்.

452. குருலிங்க சங்கமங்கள்தான் ஈசனது உண்மைத்திருமேனிகளாம். அவைகளே பிறவிநோய்க்கு நன்மருந்தாம்.

453. பால் உணவாயும் மருந்தாயும் நிற்றல்போல் இவ்வழிபாடு மலவாதனை நீக்கற்கும் சிவப்பேறு அளித்தற்கும் கருவியாய் நிற்கின்றது.

454. பிருதுவி தத்துவத்திற்கு ஐங்குணங்கள் நிறைந்திருப்பதால் சிலைமுதலியவற்றில் அவனை வணங்கும் வணக்கம் பஞ்சபூதங்களில் வைத்து அவனை வணங்கிய வணக்கமாகும்.

455. கண்ணுடிக்கு ரசம்பூசித் தகடுபோட்டால் அது முகத்தை நன்ருய்க்காட்டுமாப்போல் சிலை செம்பு முதலியவற்றில் மந்திரக்கிரியாபாவனை செய்தால் ஈசனுடைய அருள் வெளிப்படும்.

456. வியாபகமாயுள்ள சூரியனுடைய வொளிக்கெதிரே பஞ்சைப் பிடித்தால், அப்பஞ்சில் அக்கினிபற்றக்காணவில்லை, ஆனல் அவன் கிரணங்கள் பலவற்றை ஒரு கண்ணுடியில் ஒருமுகப்படுத்தலால் வந்த ஒளியில் பஞ்சைப்பிடிக்கில் பஞ்சில் அக்கி

ளிபற்றுகின்றது. அதுபோல ஈசனுடைய அருட்கிரணங்க ளை ஒருமுகப்படுத்தி வழிபடல் நமக்குப்பிரயோசனகரமாம். அப்படி வழிபடுதல் விக்கிரகவணக்கம். வி—விசேஷம், கிரகம்—கிரகித்தல்.விக்கிரகமென்றால் விசேஷமாகக் கிரகித்தற் குரியஸ்தானம் என்றுபொருள்படும்.

457. மந்திரத்தை மனத்தினுள்ளே எண்ணிச் செபித்தால் சூடுண்டாகி அமிர்தப்பிரபாகம் உடலெங்கும் வியாபித்து நோய்களைத்தீர்த்து உறுதிநிலைகொடுக்கும். மந்திரம் அட்சரச்சேர்க்கையாம். அட்சரம்- ஒலியின் கூட்டமாம். அவ்வொலி பஞ்சகர்த்தாக்களின்தேகமாம்.

458. மந்திரங்களுக்குள் பஞ்சாக்ஷரம் மிகமேன்மையாம். அது ஸ்தூலம், சூக்குமம், அதிசூக்குமம், எனப்பலவகைப்படும். இவைகளை விதிப்படிஉச்சரித்தால் சிவான்மாக்களுக்குஞானம் பிரகாசித்து முத்தி கைகூடும். விதிப்படி உச்சரித்தலை சற்குருமுன்னின்று கேட்டுணர்க. பிராசாத மந்திரபேதங்களைக் குருமுகமாய்க்கற்றுணர்க பிராசாதம்—சிவஞானகதியாகிய முத்தியைக்கொடுப்பது.

459. அகர, உகர, மகர, விந்து, நாதம், என்பவைகள் மூலமனுவென்று அழைக்கப்படுவனவாம். இவைஐந்தும் பஞ்ச சத்திகளுக்குவடிவாம். இவைபிரணவத்தின்பாகுபாடாம். மனம் அகங்காரம், புத்தி, சித்தம், உள்ளம், என்பவற்றில் இவ்வைந்தக்கரங்கள் தாமேயாய்நின்று நிலவுவனவாம்.

460. சிகரத்தைமுதலாகவுடைய முத்திபஞ்சாக்ஷரசெபம் ஞானசொரூபம் இனிது விளங்குதற்கு சிறந்தசாதகமாம். அதுவே பிறவிப்பெருங்கடல் கடத்தும்தோணியாகும். இவ்வைந்தெழுத்துக்களின் சேர்க்கையை விசாரித்தறிக.

461. அக்கினியில்மெழுகு உருகுவதுபோல நீ ஈசன்பால் மனம் உருகிநில்.

462. புறப்பூசைசெய்வதிலும் உட்பூசைசெய்வதே சிறந்தது உட்பூசைசெய்யாமல் புறப்பூசைசெய்தல் கையிலுள்ள பாயசத்தைவடியவிட்டு முழங்கைமுட்டில்நக்க முயலுதல்போலாம்.

463. இதையகமலத்துள் பளிங்குபோல்ஒளிரும் சிவலிங்கத்தை அமிர்தத்தால் அபிடேகித்து உபசாரமெல்லாம் ஒருமைப்பட்ட மனத்தோடுசெய்து சதி பதிபோல் பிரியாதிருப்பது அகப்பத்தி. லிங்கத்துஇடத்தும் குரவரிடத்தும் சிவபத்தரிடத்தும்குறைவறப்பூசைசெய்துசிவஞானமெய்துதல்புறப்பத்தி.

464. அன்பரிடத்தும் இறைவனைப்பூசிக்கலாம். சிவபூசையில்இலிங்கத்தில் இறைவனை ஆவாகனம்செய்யாமல் பூசித்தால்யாதொருபயனும் தரமாட்டாது. ஆதலால் அவ்விதிஉணர்ந்து செய்க.

465. பூசையில் பஞ்சசுத்தி மனிதர்க்கன்றி பிராணிகளுக்கில்லை. பூசையிற் செய்யும்உபசாரம் பஞ்சபூதஉபசாரமே. அதாவது நைவேத்தியம், பிருதுவி, அர்க்கியம், அப்பு, தூபதீபம், தேயு, சாமரை, விசிறி, வாயு, மணி, கரணம், ஆகாயம்.

466. பூசையிலுள்ள அசுத்தமாயாபதார்த்தங்களைச் சுத்தமாயாமந்திரங்கள் சுத்திபண்ணத்தகுதியுடையனவாம்.

467. பூசைக்குப் பத்துவித சமஸ்காரங்கள் உள்ளன அவையாவன.

(1) ஆவாகனம்—எங்கும்நிறைந்த வஸ்துவை ஓரிடத்தில் பிரகாசிக்கச்செய்வது, அதாவது மூலமந்திரத்தைச்சொல்லி சிவனை அழைக்குமாற்றால் அழைத்தல்,

(2) ஸ்தாபனம்—லிங்கத்தில் எழுந்தருளியிருக்கப்பததியாய்ப்பாவித்தல்.

(3) சன்னிதானம்—ஈசனுக்கும் தனக்குமுள்ளசம்பந்தத்தைப்பாவனைசெய்தல்.

(4) நிரோதானம்—எப்பொழுதும் அனுக்கிரகம் தன்மாட்டு வைக்கவேண்டுமென்றுவேண்டல்.

(5) முத்திரை—தேவர்களைக்கைக்கொண்டு அசுரரை விரட்டல். தேவர்கள்—நன்மைகள், அசுரர்கள்—தீமைகள்.

(6) அவகுண்டனம்—சிகை இருதயாதி ஸ்தானங்களில் நியாசம்செய்வது. நியாசித்தல்—குறித்தல்.

(7) பாத்தியம்—பாதசுத்தத்திற்காகப் பாதத்திற்கொடுக்கும் சலம்.

(8) ஆசமனம்—ஐந்து திருமுகங்களிலுங் கொடுக்கும் சலம்.

(9) அர்க்கியம்—ஐந்து சிரங்களிலுங் கொடுக்குஞ்சலம்

(10) புஷ்பதானம்—அறுகுபுஷ்பமுதலியன கொடுத்தல்.

468. பலநிறமுள்ள புஷ்பங்களைக்கொண்டு மந்திரக்கிரியாபாவனை யோடுசெய்யும்அர்ச்சனை அமிர்தப்பிரவாகத்தைஉண்டாக்கும்.

469. ஒருசெம்படவன்வலையில் மீன் சிக்குவதுபோல ஈசனும் ஆன்மாவின் பத்திவலையிலகப்படுவான்.

470. சண்டாளன் என்னும்காகம் தன்னை கா, கா, என்றுஈசனை நோக்கிக்கறைந்துநிற்க மனிதனுய்ப்பிறந்தும் அவ்வாறுசொல்லத் துணியாதவன் அதமசண்டாளனும்.

471. அன்றில் பக்ஷி தனதுபேடையைவிட்டு நீங்காததுபோல நீ ஈசனுருறவை விட்டு ஒருபொழுதும் நில்லாதே.

472. அசுணப்புள் இனியகீதங்கேட்டவுடன் மயங்குவதுபோல நீ ஈசனுருடையதிருநாமங்கேட்டவுடனேஉள்ளங்குழைந்துநில்.

473. மயிலானது மேகத்தைக்கண்டு ஆடுதல்போல் நீ கருணைமேகமாகிய கடவுளைக்கண்டு ஆடல் பாடல் செய்.

474. ஜலக்கரைக் கொக்கானது எப்போது மீன்கிடைக்குமோவென்று வேசற்றிருக்குமாறுபோல் நீ ஈசனருள் எப்போது கிடைக்குமோவென்று எண்ணியிரு.

475. கள்ளர்கள் கன்னக்கோலால் பொருளை அபகரிக்கப் பிரயாசைப்படுவதுபோல் நீ சிவஞானபொக்கிஷத்தை பத்திஎன்கின்றகோலால் அபகரிக்கமுயல்.

476. தீக்கடைக்கோலினுல் கடைந்தால் அக்கினி வெளிப்படுமாறுபோல் உறவுஎன்கிறகோலை நட்டு உணர்வுஎன்கின்ற கயிற்றினுல் இழுத்தால் இறைவன்வெளிப்படுவான்.

477. பிரணவத்தை மேலரணியாகவும் ஆன்மாவைக்கீழரணியாகவும் வைத்துக்கடைந்தால் ஆன்மநாயகனுகிய பரஞ்சுடர்வெளிப்படும்.

478. ஈசனிடத்து அன்பில்லார் கருணைபற்றவராகித்தமக்கும் அன்பில்லாதவராகிறார்.

479. பசு பாசப்பற்றுவிடலே பற்றுவிடலாகும் மற்றொருபற்றாகிய பதிப்பற்றை விடலாகாது, விட்டால் சிவபோகங்கிட்டாது.

480. எண்ணெய் நிரம்பிய ஒருவட்டிலைக் கையிற்றாங்கிச் செல்பவன் அவ்வெண்ணெய் சிந்தாதபடி சதாகருதிநிற்பான். அதுபோல நீ ஈசனைச்சதாநினையுங் கருத்தாகவேநில்.

481. கைவீசிநடக்குந்தாதியின் எண்ணம் நீர்க்குடத்திற்றான் வைக்கப்பட்டிருக்குமாறுபோல் நீ பலதொழில்கள் செய்துகொண்டிருந்தாலும் உன்மனத்தை ஈசன்பால் நிறுத்து.

482. பள்ளத்தைநோக்கி வெள்ளம்செல்லுமாறுபோல் தாழ்வெனும் தன்மையுடையாரிடத்து ஈசனதுகருணைவெள்ளம் மிகுந்துபாயும்.

483. ஒரு உடும்பானது பற்றினதை விடாததுபோல் பதிப்பற்றைப்பற்றியபின் விட்டுவிடாதே.

484. புழு வேட்டுவனை மறவாததாகி வேட்டுவன் உருப்பெற்றாற்போல நாம் சிவனைமறவாமல் தியானித்தால் அவன் உருப்பெறலாம்.

485. எறும்பு ஊற ஊறக்கல்தேயுமாறுபோல் நாம் ஈசனை தியானிக்கத் தியானிக்கஆணவவலிதேயும்.

486. பாசிபடு குட்டத்துட் கல்லினைஎறிந்தால் அவ்வேளையில் பாசிநீங்குமாறுபோல் ஈசனைத்தியானிக்கும்போதுமாத்திரம் ஆணவபாசம் நீங்கிநிற்கும். ஆகையால் முற்றுநீங்குதற்குபாயமாக நீக்கமறத் தியானிக்கவேண்டும்.

487. ஈசனை இராவுபகல்என்னும் இரண்டுகாலங்களிலும் தியானிக்கக்கூடாது. ஆகையால் இராவுபகல் அற்றஇடத்தில் தியானிக்கவேண்டும்.

488. ஆலாஎன்கிறபக்ஷி மீன்கொத்தற்காக நீர்மேல்படபடப்பாய்ப்பறந்துதிரிதல்போல ஈசனருளுக்காக நாம்பரபரத்தல்கூடாது பையப்பையச்செல்லவேண்டும்.

489. ஒரு வீணைத்தந்திப்பிரடையைமிகமுறுக்கினல் அது உடனே அறுந்துபோம், அதுபோல அவசரமாய்த்தியானியாமல் வேண்டியஅளவு நியதமாய்த்தியானித்தால்தான் அத் தியானம் நமக்குப்பிரயோசனப்படும்.

490. நாம் துன்பத்தைப்பாவித்தால் துன்பமயமாகிறோம், இன்பத்

தைப்பாவித்தால் இன்பமயமாகிறோம். அதுபோல சிவனைப் பாவித்தால் சிவமயமாகிறோம்.

491. கூட்டின் அளவுகாட்டுங் கருவியின் ரசம் சூடுஅதிகரித்தால் மேல்நோக்கியும் அதுகுறைந்தால் கீழ்நோக்கியுஞ் செல்லுமாறுபோல் தியானக்கினிஅதிகரித்தால் ஈசனுடைய தோற்றம் அதிகமாயும் அதுகுறைந்தால் அவன்தோற்றம் குறைந்தும் நிகழும்.

492. தங்கத்தைச் சுடச்சுட அது மிகுந்து ஒளிரும். அதுபோல தியானிக்க தியானிக்க ஆன்மாப் பிரகாசம் அதிகரிக்கும்.

493. ஈசனைத் தியானிக்காமல் வீணே காலம் போக்குகிறவர்கள் ஆட்டுக்கழுத்தின் அதர்போல் பிரயோசனப்படாராகி வீணே இறந்து கழிவர்.

494. யானை என்னும் வியாதி விளங்கனியிலுள்ள சத்தை வெளிக்குத்தெரியாமல் தின்பதுபோல் சிவத்தியானமானது சித்தத்துள்ளிருக்கும் சஞ்சித மலக்கட்டைத்தின்று விடும்.

495. எரிந்தகாட்டத்தின் மேலுள்ள வெண்சாம்பலை நீக்கிவிட்டால் உள்ளே அக்கினி ஒளிரும். அதுபோல் வெளிமயக்கத்தைத் தள்ளிவிட்டு உண்முகமாகப்பார்த்தால் அக்கினிமயமான ஈசன் தோன்றுவான்.

496. காமக்கிழத்தியர் ஆடைமுதலியன காமுகரை வசீகரித்தல் போலச் சிவவேடம் அன்பர்களை வசீகரிக்கும்.

497. சித்திகள் அகங்காரத்தைக் கொடுக்குமாதலால் அவைகளின் வழி நில்லாதே.

498. அபக்குவரிடத்து ஞானமார்க்கம் போதித்தல் ஒரு நாய் முன் முழுத்தேங்காய் சுறிதல்போலாம்.

499. சிப்பியினுள் விழுந்த மழைத்துளியானது பையப் பைய முத்தாய் விளையுமாறுபோல் பக்குவ ஆன்மாவினுள் வைத்த ஞானவித்தும் பையப் பைய முளைத்துத் துளிர்த்துக் காய்த்துப் பழுக்கும்.

500. தாமரை இலைத்தண்ணீர்போல் மெய்ஞ்ஞானிகள் பிரபஞ்சத்திலிருப்பார்கள். பிள்ளைப்பூச்சி சேற்றிலிருந்தாலும் அச்சே

று அதன்மேல் ஒட்டாததுபோல் மெய்ஞ்ஞானிகள் பிரபஞ்சத்தில் வசித்தாலும் அதில் தாக்குறார்கள்.

501. மெய்ஞ்ஞானிகள் சோகம் பாவனை பண்ணுதலால் சிவமாய்க் கருதப்படுவார்கள். அக்கினியினால் வறுத்தவித்து மீளமுளையாததுபோல் இதாகிதங்கள் ஞானிகள்பால் அணுகாவாம்.

502. காயம்வைத்திருந்த பாண்டத்தில் அவ்வாசனையிருப்பதுபோல மெய்ஞ்ஞானிகளுக்கும் மும்மலம் கழிந்தாலும் வாசனை வந்து தாக்கும்.

503. வெட்டின மரத்துண்டு துளிர்த்தபின் உலரும். அதுபோல வினை நீங்கியபின்னும் தேகவாசனைகூடிப் பின்மாயும்.

504. மோரில் வெண்ணெய்மிதப்பதுபோல சீவன் முத்தரும்தேகத்தோடு கூடியிருப்பர்.

505. மனநிலை மாறுதிருக்குமாறு சிவனேசர்திருக்கூட்டத்தில் நீங்காதிருத்தல்வேண்டும்.

506. சீவன்முத்தர்களுக்கு உடம்பிருந்தாலும் அவர் பாசமுடையரல்லர். ஏனென்றால் முதல்வன் திருவருட் பார்வையையே உடையராதலாலென்க.

507. பேய்த்தேர் அதிவேகமாய்ச்செல்லுதல்போல பாசக்கூட்டம் திருவடி ஞானம் வந்தபோது நில்லாது கழியும்.

508. மணியின் நாக்கானது மணியினுடன் கொஞ்சம் ஒட்டி நின்றாலும் நாக்கின் பெரும்பாகம் அம்மணியிற்றழுவுதலில்லாது நிற்றல்போல சிவஞானிகள் தேகச்தோடிருந்தாலும் அதனிடத்தில் பற்றற்று நிற்பார்கள்.

509. தராசுமுனைபோல் நேராக நிமிர்ந்து ஆசனத்திலிருந்து யோகஞ் செய்யவேண்டும்.

510. யோகிகளுக்குப் பிறவியுண்டு ஆதலால் மேலான ஞானத்தை நாடுக. பாம்புகள் சட்டை உரிப்பதுபோல் யோகிகளும் சட்டை உரிப்பார்கள்.

511. ஆமை மாரிகாலத்தில் தன் வளையுள்ளிருந்து காற்றைப் புசிப்பது போல் யோகிகள் தியானகாலத்தில் குகைக்குள்ளிருந்து காற்றைப்புசிப்பார்கள்.

512. ஒருநீரோட்டத்தை அணையால்தடைப்படுத்தினுல் அவ்வணை உடைத்துப்போகுமாறு நீர்நிற்றல்போலமனவோட்டத்தைக் கும்பகத்தால் தடைப்படுத்தினுல் மனம் அதனைமீறிச் செல்லா நிற்கும்.

513. மனம் ஒரு குரங்கிற்குச்சமானமாம். ஆதலால் அதனை அதன் வழியே விட்டு பின் குணவழிக்குத் திருப்புதல் நலம்.

514. ஆமை தனது ஐந்துகரங்களையும் அடக்குவதுபோல் பெரியோர்கள் ஐம்பொறிகளையுமடக்கி நிற்பார்கள். அலைபோலெழுங் கோபாக்கினியைச் சாந்தமாகிய நீராலணைப்பார்கள். விளக்கொளி அலைவதுபோல் அலையும் மனத்தையடக்குவார்கள்.

515. சிவஞானிகளுக்கு அளித்த எள்ளளவு தானமும் ஒரு பெரிய மலைபோல் நின்று பயன்தரும். ஆதலால் அவர்களுக்கு ஊண் உடை உதவுக.

516. ஒரு சிறு கட்டெறும்பு பெரியயானையைப் பேதிக்கும். அதுபோல் சிறு சிவபுண்ணியமும் மலைபோல்நின்ற கன்மத்தைப்பேதிக்கும்.

517. ஓடும்தமனியமும் பிருதிவியாதலால் ஞானிகள்அவற்றைச் சமமாக எண்ணுவார்கள்.

518. இறைவனை சுட்டினுல் சுட்டமுடியாதென்பதை ஞானிகள் சின்முத்திரையாற் காட்டுகிறுர்கள்.

519. வாயால் இவ்வண்ணமென்றுகூறினுல்வாக்குக்குக் கோசரமாவனுதலால் அவர்கள் மவுனமானுர்கள். மனத்தால் நினைத்தால் நினைக்கப்படும் பொருளாகுவனுதலால் மனமிறந்து நின்றுர்கள்.

520. எல்லாம் சிவன்செயலெனக்காண்டல் நிட்டை.

521. உலகம் உடல் யோனி கை கால்; முச்சத்தி அந்தக்கரணம் ஆன்மா பஞ்சேந்திரியம்; எனக்கருதி ஈசனது நிலையை பார்த்தலு நிஷ்டையாம்.

522. ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரித்தலும் நிஷ்டையாம்.

523. அந்தரியாக பூசையும் நிஷ்டையாம்.

524. சிவன்செயல் இப்படியோவென்று பார்த்திருப்பதும் நிஷ்டையாம்.

525. குருவைப் பரமானந்தசொரூபமாய்த் தியானித்தலும்நிஷ்டையாம்.

526. சேஷ்டரை வழிபடுதலும் நிஷ்டையாம்.

527. தருப்பையாசனத்தின்மேல் பத்மாசனமிட்டு இருந்து அந்தரியாக பூசைசெய்தல் மிகமேலான முத்திசாதனமெனப்பெரியோர் கூறுகின்றார்கள்.

528. இருதயம் பூசா ஸ்தானம். நாபி ஹோமத்தானம். புருவநடுத்தியானத்தானம் இவ்வாறு செய்தற்குரிய விதிகளை சற்குரு முன்னிலையில் கேட்டுணர்க.

529. சரியை கிரியை யோகம் ஞானம் முறையே அரும்பு மலர் காய் கனி போலாம். சன்மார்க்கமென்பது ஞானமார்க்கம். சகமார்க்கமென்பது யோகமார்க்கம் புத்திரமார்க்கமென்பது கிரியாமார்க்கம் தாசமார்க்கமென்பது சரியாமார்க்கம்.

530. சரியை முற்றியபின் கிரியையும், கிரியை முற்றியபின் யோகமும், யோகமுற்றியபின் ஞானமுங் கைவரும். இவை நான்கும் பதினாறு உட்படிகளை உடையனவாம், சரியையில் சரியை முதற்படி ஞானத்தில் ஞானம் கடைப்படி.

531. பதி பசு பாசம் உணர்ந்து இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநி பாதம் எய்தி முத்திபெறுதல் ஞானமார்க்கமாம்.

532. இடகலைபிங்கலைகளை ஒடுக்கித்தடுத்துச் சுழுமுனைமார்க்கமாக ஆதாரங்களைச்சந்தித்து அங்குள்ளமூர்த்திகளைத் தரிசித்துப்பின் பிரமரந்திர அமுதத்தை உடல் முழுவதும் பரவச்செய்து உடலை ஒளி உருவாக்கி அதுவழியாக நிலைக்கச்செய்து ஈசனது திருவுருவைப்போல சாரூப்பியம் பெற்று வாழ்தல் யோகமார்க்கமாம்.

533. திருமஞ்சனம் பூ அமுது புகை ஒளி தாம்பூலமுதலியவைகளைத் தேடிவைத்து ஐந்துவகைச்சுத்திசெய்து வித்தியா தேகம் விதிப்படி ஸ்தாபித்து சிவலிங்கத்தில் தற்பரனைக்கொண்டு வந்து சிவாகமஞ்சொல்லி யாங்கு புசித்தலால் சிவபிரானது சமீபத்திலிருத்தலாகிய சாமீப்பியபதவி பெறுதல் கிரியா மார்க்கத்தாலாம்.

534, விபூதி திருவேடம்போற்றிப்பூங்காவனஞ் சமைத்துப் பூமாலை சிவபெருமானுக்கு அமைத்துத்திருக்கோயிலைப்பெருக்கி மெழுக்கிட்டுவிளக்கேற்றிப்பலகாலும் ஈசனை அன்போடு வணங்குதலும் கோயில் பல கட்டுதலும் புதுக்குதலும் சாலோக பதவி யெய்தற்குரிய சரியாமார்க்கமாம்.

535. (1) சரியையிற் சரியை—இஷ்ட தேவதைகள் முதலியோரை நினைத்து மந்திரத்தால் செபித்தல்.

(2) சரியையிற் கிரியை—ஆலயவழிபாட்டின் முறைமையில் நடந்து திருவலகிடல் மெழுகுதல் திருமஞ்சனம் கொணர்தல் இண்டைமாலைகள் செய்து சிவபெருமானுக்குச் சாத்தக்கொடுத்தல் திருவேடத்தார்க்கு அடிமைத்தொழில்செய்தல் அவர் ஏவல் வழிநிற்றல் முதலியனவாம்.

(3) சரியையில் யோகம்—திருக்கோவிலினுள் நியதிசெய்புமிடத்து சதாசிவநாயனரைப் பதுமராகவொளிபோல் இருதயத்தில் தியானித்து அவ்வொளியுடனே மனப்பற்றுகிநிற்றல்.

(4) சரியையில் ஞானம்—இந்திரியங்களை அடக்கி ஞானபுஷ்பங்களாகிய கொல்லாமை முதலிய எட்டினாலும் சிவனை அர்ச்சித்து சதாசிவ மூர்த்தியையும் அவன் அடியாரையும் அவன் உறையுமாலயத்தையும் பரம்பொருளாய்க்கைக்கொண்டு தியானம் செய்திருப்பது.

(5) கிரியையிற் சரியை—ஜலசுத்தி முதலியன செய்து சுவர்க்காவஷ்ட சுதா என்னும் முக்கோடிமந்திரங்களால் தபித்து ஜெபித்து தோத்திரமுஞ்செய்தலாம்.

(6) கிரியையிற் கிரியை—சூரியபூசைமுதல் சண்டேசுரர் பூசைவரை செய்துமுடித்து ஒடுக்கிச் செபித்தல்.

(7) கிரியையில் யோகம்—உடம்பின் பகுப்புகளையும் ஆதாரங்களையும் நாடி வாயுக்கள் இவை நிற்கும் நிலைகளையுமறிந்து பிராசாத மந்திரோச்சாரணத்தால் உன்மனைகலைவரை சிவனைத்தியானித்து அவனது திருநடந் தரிசித்திருத்தல்.

(8) கிரியையில் ஞானம்—திருமஞ்சனம் மலர் முதலியவற்றை மனக்கோயிலுள்ளமைத்து இதய கமலத்தில் வித்தியாதேகமத்தியிலுள்ள சிவனைப் பூசித்தல். புருவமத்தியில்

தியானித்தல் நாபியில் பிரணவத்தால் ஓமித்தல் முதலியன வாம்.

(9) யோகத்திற் சரியை—இயம நியமங்களியற்றி பிரணவத்தால் பிராணயாமஞ்செய்து சங்கிதாமூலமந்திரத்தால் சிவனைத் தியானித்துத் தண்டன் செய்வது.

(10) யோகத்திற்கிரியை—பத்மாசனமுதலிய ஆசனவகையறிந்து பிராணயாமவகைபலவும் புரிந்து தியானித்து அறிவுடனே வாயுவை க்ஷீணப்படுத்தல்.

(11) யோகத்தில் யோகம்—நிராதாரயோகத்தால் இறைவனுள் வேறற்றுறைந்து தூங்குதல் பிரத்தியாகாரதாரணைகள் இதனுளடங்கும்.

(12) யோகத்தில் ஞானம்—சித்திகள்பெற்று நாதவழியே சென்றுஇறையுடன் பேதியாமல் நிற்கும் உண்மைநிலை சார்தல் இது சமாதி.

(13) ஞானத்தில் சரியை—நீடித் துநிட்டை கலையாதிருத்தல்.

(14) ஞானத்திற்கிரியை—ஞானபூசை விதிப்படி செய்தல் இதனுள் ஞானநூலை ஓதல் ஓதுவித்தல் முதலியனவும் சத்தியோ நிர்வாண தீக்ஷையுஞானந்தியேஷ்டியும் அடங்கும்.

(15) ஞானத்தில் யோகம்—ஐம்பத்தொரு அக்ஷரத்தினுள் மேலானதாகிய முத்தி பஞ்சாக்ஷர முறையுணர்ந்து ஆன்மா சிவத்திலேசார நாடுங்கருத்தாய் எப்போதும் உச்சரிப்பது.

16. ஞானத்தில் ஞானம்—பதி பசு பாச ஞானங்களின் உண்மை முழுதுந்தெரிந்து தன் செயலற்று ஈசன் தன்செயல் நடக்குந்தன்மைகண்டு சுயம்பிரகாசராகிய இறைவனது பேரானந்தப் பெருக்கினுள் அமிழ்ந்தியொன்றுபுறங்குதலாம் இது முத்தி முடிவு.

536. முத்திநன் னெறியினை தசகாரியத்தில்அமைத்துக் கூறுவர் எங்ஙனமெனில்.

1. பிருதுவி தத்துவமுதல் நாததத்துவமீறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களை தனக்கு வேறாகக்காண்பது தத்துவரூபம்.

2. அவைகள்சடப்பொருளென்றும் தன்னாலறியப்பட்டவை களென்றும்தன்னறிவில்விளங்கக்காண்பது தத்துவதரிசனம்.
3. அவ்வாறு கண்டு நீங்கித்தான் அன்னியனாய் நிறைவாய் நித்தியமாய் அறிவாய் உள்ள தன்மையை அறிந்து நிற்பது தத்துவசித்தி.
4. ஆணவமலம் நீங்கித் தானறியுமுறைமையையும் தன்னறி விற்கு அறிவாய் நிற்கும் இறைவனது ஞானம் உபகரிக்கிற முறைமையையுந் தன்னறிவிலே விளங்கக்காண்பது ஆன்ம ரூபம்.
5. ஆன்மாவின் சிற்றறிவாகிய சுட்டும் போதங்கழன்று நிற் றல் ஆன்மதரிசனம்.
6. அனுக்கிரக ஞானத்தால் சிவமே தானாய் நிற்றல் ஆன்ம சுத்தி.
7. சத்திநிபாதம் விளைந்து குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்தபோது தான் வேறற நிற்கிற முறைமையைத் தருகின் றவன் அறிவிற் கறிவாய் நிற்கிற சிவனென்று தன்னறிவி லே விளங்கக் கண்டு நிற்பது சிவரூபம்.
8. யான் எனது என்பனவின்றித் தேசிகமூர்த்தியின் அனுக் கிரகஞானத்தை எவ்விடத்துங் கண்டனுபவிப்பது சிவதரிச னம்.
9. சிவனுடனே இரண்டறக் கூடினமுறைமை சிவயோகம்.
10. சிவனது இன்பநிலையில் அமிழ்ந்தி நிற்பது சிவபோகம்.

537. முத்திநெறியின்கண்ணுள்ள மூப்பதவதரமும் தசகாரியத்து ள் அடங்குமுறைமை காட்டுவாம்.

1. பஞ்சபூதப்பழிப்பு 2. பொறிபறவுணர்தல் 3 அந்தக்கரண சுத்தி 4. கலாதிஞானநிராகரணம் 5. சுத்ததத்துவதூடணம் 6. தத்துவாதீதம் 7. சகலதரிசனம் இவை ஏழும் தத்துவ ரூபம் தத்துவ தெரிசனம் தத்துவசுத்தி என்னுமூன்றனுள் ளடங்கும்.
8. கேவலம் 9. கேவலதரிசனம் 10. கேவலாதீதம் இவை மூன்றும் ஆத்மரூபமாம்.

11. சைதன்னியதரிசனம், இது ஆன்மதரிசனம், 12. ஞானதரிசனம், 13. பரைதரிசனம், 14. பரைவியாத்தி, 15. பரையோகம், 16. பரைபோகம், 17. சுத்தபரையோகம், 18. சுத்தபரைபோகம், 19. சாக்கிராதீதம், இவை8 ம் ஆன்மசுத்தியாம்.

20. பரையிலதீதம், 21. சுத்தாவத்தை, 22. சுகரூபம், இவை 3ம் சிவரூபமாம்.

23. சுகாதீதம், 24. சுகப்பேறு, 25. பரமானந்ததரிசனம், இவை 3ம் சிவதரிசனமாம்.

26. பரமானந்தயோகம், இது சிவயோகமாம்

27. பரமானந்தபோகம், 28. பரமானந்தமேலீடு, 29. பரமானந்த அவசம், 30. மறித்துக்காட்சி இவை 4ம் சிவபோகமாம்.

538. சமாதியைவிடுத்து நிற்கையிலும் அருள்மயமாய் எங்கும் காண்பது உலகழிப்பு அல்லது மறித்துக்காட்சி என்று சொல்வர்.

ஏழாவது சாதனவியல் முற்றிற்று.

## எட்டாவது அநுபவவியல்.



539. அநுபவமில்லாத ஞானம் சொற்பனம் போலாகும். அநுபவ ஞானம் சாக்கிரம் போலாம்.

540. தற்போதமழிந்தவிடத்துச் சிவபோதமே மேலிடும். அங்கு ஓர் ஒளியுண்டாம்.

541. அவ்வொளி விளக்கின்கண் சூழ்ந்துநின்று ஒளிருமொளிபோற்றுலங்கும்.

542. அவ்வொளிக்குள் பஞ்சவர்ணப்படங்களை விரித்தாற்போன்று மாறென்னப் பலநிறச்சோதி தோன்றும்.

543. சித்திரவடிவங்கள் அநேகம் அவ்வொளிக்குள் தோன்றும்.

544. பஞ்சமூர்த்திகள் பஞ்சசத்திகள் அவ்வொளிக்குள்தோன்றும்.

545. சிவம் பனி புகை திக்காற்று காற்று அக்கினி மின்மினி மின்னம் பளிங்கு சந்திரன் முதலியவைகளைப்போன்ற பலதோற்றத்தோடு வந்துறும்.

546. பலபுவனப் பரப்புகளுந்தோன்றும்.

547. எழுவகைத்தோற்றத்தின்கண் வந்த பல உயிர்வர்க்கங்களும் ஆண்டுத்தோன்றும்.

548. பளிங்கொளிபோன்ற விந்துக்கள் பல சந்திரனைப்போல வெளிப்படும்.

549. சூரியன் ஒளிபோல அகண்டசோதியானது தோன்றியபின் தசநாதமும் பிறக்கும்.

550. எங்கும் வியாபித்துப் பரந்துநிற்குஞ் செஞ்சுடராகிய பரை தோன்றும்.

551. அப்பரை யொளிக்குள் ஆன்ம சைதன்னிய மழுந்தும்போது உருக்கம் கண்ணீர் திகைப்பு கம்பம் நகை பெருவலி புகை முதலியன உண்டாம்.

552. பின் பாலன் உன்மத்தன் பக்குவம் நிகழும்.

553. பரை யொளிக்குள் உள்ளொளியாகிய பேரானந்தச் செஞ்சுடர் சாணும். இதற்கு உவமையில்லையாம். வாக்குக்கெட்டாததாம். உள்ளொளியாய் நின்று மீமிசை விளங்கித்தோன்றும் அப்பரஞ்சோதியே சிவமாம் என்பதை ஞானக்கண்ணினாற் காணக்கூடும்.

554. சிவமே கண்டிருக்கும் ஆன்மா பசையற விழுங்கப்பட்டு ஆனந்தாதீதத்தில் வைக்கப்பெறுவன்.

555. இவ்வநுபவங்கள் மூலாதாரமுதல் பிரமரந்திரபரியந்தம் சகளரூபியாய் வியாபித்திருக்கும் சூரியப்பிரகாசம் போன்ற சுழுமுனை நாடியின் மத்தியில் பேரொளியாய் சூக்குமமாய் விளங்கும் சிவனைக்குருவழியாய் தியானித்துச் சமாதி கூடலாலும் பதி பசு பாச வுண்மை யுணர்தலாலும் உறும்.

556. ஒரு வயிரப்பெட்டி கிடைத்தால் அது உனக்குக் கிடைத்தது என்றுஒருவரிடமும் சொல்லாய். அதுபோல ஈசனருள் கிட்டினால் அதை வீணே சொல்லித்திரியேல். ஏனென்றால் பிறர் தங்கள் அநுபவங்களைக்கொண்டு பேதலிக்கச்செய்வார்கள்.

557. அநுபவம் ஒருவர்க்கு நிகழ்ந்தவாறு மற்றொருவர்க்கு நிகழாது. ஏனென்றால் ஈசன் தனக்காட்பட்டவர்களுக்கு அருளும் வண்ணமும் அவனது ஆதிமாண்பும் ஒருவன் கேட்கப்புகுவானாகில் அது அளவில்லாததாய் முடியும், ஆதலால்நீ அநுபவக்காட்சிகண்டால் ஊமன் கண்டகனுப்போல வெளியிடா திருப்பாயாக.

அநுபவவியல் முற்றிற்று.

## ஒன்பதாவது முத்தியியல்.

558. முத்தி என்பது விடுதல் என்னும் பொருதள்ரும். அது சீவன் முத்தி என்றும் விதேகமுத்தி யென்று மிருவகைப்படும். சீவன் முத்தி உடல் நிற்கும்போதே யடையுமுத்தி. விதேகமுத்திதேகங்கழிந்தபின்னடையுமுத்தி.

559. இரும்புண்டநீர் திரும்பி வராததுபோல் ஈசுவரனையடைந்த ஆன்மாவுந் திரும்பிவராது.

560. சந்திரனுடைய ஒளிக்குள் உடுக்குலமடங்குமாறுபோல் ஈசனுடைய பேரொளிக்குள் ஆன்மாக்களடங்கி நிற்பனவாம்.

561. சமுத்திரத்திற் சேர்ந்த நதியானது திரும்பிவராததுபோல் இறைவனைச் சார்ந்த ஆன்மாவுந் திரும்பிவராது.

562. கண்ணொளியுங் கதிரொளியுங் கலந்து நிற்பதுபோல் ஈசனுடன் ஆன்மா கலந்துநிற்கும்.

563. உப்பளத்திற் சார்ந்த துரும்பு உப்பாவது போல் இறைவனைச் சார்ந்த ஆன்மாவும் இறைவனும்.

564. அக்கினிதன்னைச்சார்ந்தஇரும்பினைத்தன்மயமாக்குவதுபோல ஈசனும் தன்னைச்சார்ந்த ஆன்மாவைத் தன்மயமாக்குவான்.

565. கடலில் முழுகப்போனவர்கள் அதன் ஆழத்தையும் பெருமையையுங் கண்டறிதல் கூடாவாம். அதுபோல இறைவனது பேரானந்தத்தில் முழுகினவர்கள் அவனது முழு நிலையையுங் காணார்கள்.

566. கால் தலை என்ற வார்த்தைகள் புணருங்கால் காறலை என்று ஆகும். அப்பொழுது றகரம் ஓரெழுத்தென்றாவது ஈரெழுத்தென்றாவது சொல்லமுடியாது. அதுபோல் ஆன்மா இரண்டறக்கலநதபோது ஒன்றென்றாவது இரண்டென்றாவது சொல்ல முடியாமல் அத்துவிதமாம்.

567. ஆன்மா விடுபெற்றபோதும் பரமனுக்குப் பலவழியு மடிமையாகும்; அவன் ஆண்டு ஐந்தொழில் செய்தற்குரியனுகமாட்டான் சிவாநந்தத்தை யநுபவித்தற்கு மாத்திரம் உரியனுவன்.

568. வண்டுகள் தேனை மாந்தி அம்மயமாயிருப்பதுபோல ஆன்மாவும் பேரானந்தத்திலழுந்தி அம்மயமாய் நிற்கும்.

569. ரசகுளிகை பொன்னினையடக்குதல்போல் ஈசனும் ஆன்மாவைத் தன்னுள்ளடக்கி நிற்பான்.

570. அப்பணைந்தவுப்பேபோல் ஆன்மா அரன்கழலை ஒன்றிநிற்கும்.

571. புணருந்தோறும் போகம் விளைதல்போல் இணையடி யுணருந்தோறும் சிவபோகம் வளரும்.

572. முத்திநெறி ஒன்றே. அந்நெறியில் முப்பது சத்திரங்களுள்ளன. முப்பதாவது சத்திரம் மேற்காட்டிய பரமாநந்த அவசம். மதவாதிகள் ஒவ்வொருவரும் இடை இடையே யுள்ள சத்திரங்களில் தங்கி நிற்பவர்களாவார்கள். எந்தத்தத்துவம் வரை அவர்கள் ஒப்புக்கொள்ளுகிறுர்களோ அந்தத் தத்துவமே அவர்களுக்கு முத்தியாம். ஆனல் இவை யெல்லாம் பதமுத்திகளாம், பரமானந்த அவசமே மேலான சாயுச்சியமாம்.

573. ஒரு ஊசலானது கயிறற்று விழுந்தால் அதற்குத் தாரகம் தரையாதல் போல் ஆன்மா மும்மலப்பந்த மற்று விழுந்தால் அதற்குத் தாரகம் சிவ பூமியாம்.

574. வேள்வியாலுறும் பதவியின்பம் சிற்றின்பமேயாம். ஆதலால் நிலைபுள்ள பேரின்பத்தை நாடுக. இவ்வின்பம் இன்னதென அநுபவத்தாற்றன் காணல் கூடும்.

575. சிவபிரான் திருவருளின்றி மோக்ஷமடைய முயலல் ஆகாயத்தைப் பதமிட்ட ஒரு தோலைப்போற் சுருட்டமுயலுதற்கொக்கும்.

576. ஞாதுரு, ஞான, ஞேயம் என்பன சங்கற்ப ஞானத்துள்ளடங்கும். சிவஞானம் இவைகடந்த ஞானம். இதனையடைந்தோர் சிவமே கண்டிருப்பர்.

577. தன்னைத் தருவானாகி முத்திக்குரிய ஆன்மாவைத் தனது சுயம்பிரகாசப் பரப்பினுள் கவர்ந்து கொள்வான். அங்கு ஆன்மா பெறும் ஆனந்தத்திற்கோர் அளவில்லை. அதுவே மாறாத சிவாநுபவமாம். ஆண்டு இறைவன் உயிரோடு கலந்த வழி, கரும்பு, தேன், பால், கனி, அமுது கண்டை யொத்திருப்பன்.

578. ஆத்துமா தன் ஆனந்தத்தையே, முத்தியிலுமநுபவிக்கு மென்பது கிரியா விரோதமாகி நியாயத்திற் கொவ்வாததாகின்றது.

579. சிவனும் ஆன்மாவும் பொருளில் வேறுபட்டும் பிரிந்தும் நின்றமையா லிவ்விருவருங் கூடுங்கூட்டிற்குச் சாயுச்சியமென்று பெயராயிற்று.

580. சமாதிகாலத்தில் ஆன்மாவிற்றோன்றும் இன்பம் சிவரூபமான பேரின்பமேயன்றி, ஆத்மானந்தமன்று. ஆனால் ஆன்மா படிகம்போல்வதொன்றாகலின் இப்பேரின்பம் ஆன்ம இன்பம்போல் தோன்றிற்று. அதுபற்றி அவ்வாறு கொள்ளற்க.

58 . வேதாகமங்களில் முத்தியிலக்கணங்கூறுமிடத்துப் பெறுவான் ஆன்மாவென்றும், அவனடையும் ஆனந்தநிலை பேறு என்றுங் கூறியிருத்தலால் ஆன்மாவிற்கோர் ஆனந்தமுண்டென்பதைமறந்து விடுவாயாக.

582. ஆன்மா தன்னையே கண்டிருப்பது முத்தியன்று. ஏனெனில் இன்பம் ஆன்மாவின் குணமாகில் (குணகுணிகள் வேறின்மையின்) ஆன்மாவிற் கோரனுபவ மின்றாம். அன்றியும் "முத்தர் சிவமே கண்டிருப்பர்" என்னும் ஆன்றோர் வாக்கியத்திற்கும் விரோதிக்கின்றமை யுணர்க.

583. ஈசனைக்காணவேண்டு மென்று செய்யும் தவங்களெல்லாம் பொய்யாகித் தன்னையே தான்காண்டல் மெய்முத்தியாகில் அத்தவங்களெல்லாம் மோசமாய் முடிந்தமை காண்க.

584. யான் என்பதறல் முத்தியாக ஆன்மா மீண்டுந்தன்னையே கண்டு கொளல் முத்தியாவதெங்ஙனம்? அஞ்ஞான பந்தநிவிர்த்தியாயது எவ்வாறு? ஞானம் பெற்ற தெவ்வாறு? என்பவைகளை ஆய்ந்து ஆத்மானந்த மில்லை எனக்காண்க.

585. ஆத்மாவிற்கு ஆனந்தமுண்டாகில் எண்ணில்லாத பிறவியையும் இறப்பையும் அவ்வான்மா எய்த வேண்டியதன்று.

586. இரும்பைச் சேர்ந்த தீயின்குணம் இரும்பின் குணமாகத் தோற்றுதல்போல் ஆன்மாவிற்றோன்றும்பேரின்பம் ஆன்மாவோடு இரண்டற நிற்றலின் அவ்வான்மாவின் குணம் போற்றோன்றும்.

587. ஆன்மாவிற்கு ஆனந்தமில்லையென்று அறுதியிட்டதால் ஆன்மா சத்தாகியும் சித்தாகியும் நின்றதைத்தவிரச்சச்சிதானந்த பேதமில்லாத வனாயினமைகண்டு சச்சிதானந்தன் ஈசனொருவனே யென்றுணர்க. இதனாற் சிவ சமரச முத்தி மறுத்தமையுணர்க.

588. முத்தியில்ஆன்மா மும்மலங்கள் நீங்கப்பெற்றுச்சிவானந்தவெள்ளத்திற்றிளைத்து அவ்வானந்த மயமாய்நிற்கும்.

589. உள்ளம் என்றகாட்டில் பஞ்சேந்திரியங்களின் செயல்களாகிய செடிகளைவெட்டிப்பத்தி யென்கின்ற ஏரால்உழுது அன்பு என்கின்ற நீரைப்பாய்ச்சிச் சிவமென்கிற விதையையூன்றிச்சிவஞானமென்கின்ற பயிரை வளர்த்து அஞ்ஞானமென்கின்ற களையைப்பிடுங்கிச் சாயுச்சியமென்கின்ற பலனைக்கைக்கொண்டு பேரின்பமென்கின்ற உணவையுண்டு சுசித்திருப்பீராக.

590. சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
செனனமொன்றி லேசீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும் பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி.(சித்தியார்)

591. நூலினையறிந்தார்போன்று நுண்ணறி வுடையார் போன்று மாலினைத் தவிர்ந்தார்போன்றும் வழியறிந் தடைந்தார் போ மேலெனத் தத்தங்கோளே விதந்தலை கின்றார் நந்தி [ன்று சாலவன் றருளுநூலின் றலைப்படாவுள்ளத்தாரே. (தணிகைப்புராணம்)

592. தீதிலாத் தியானத்தாற் சேகறுநன் முத்தியினைச் சேரலாமா லாதலாற் றியானமே செயவேண்டும் ஞானத்தாலடையும்வெவ்வே, றோதியமெய்த்தியானந்தான் ஞானமும் யோகிக்கேவந் துறுமாற்செய்ய, கோதிலாத்தியானமொடு ஞானம் வல்லோர் முத்தியினைக் குலவுவாரே. (வாயுசங்கிதை)

593. ஒங்குணர்வி னுள்ளொடுங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். (திருவருட்பயன்)

594. நூறுகோடியேபிறந்து நூல்கள்பல கற்றாலு
மாறுகோடி சித்தி யடைந்தாலும்-பேறல்ல
நித்தன் மலரடிக்கே நீக்கமற வேவைத்த
வத்துவிதங் காணு தவர். (ஞானசுகாதீதவெண்பா)

595. உள்ளமலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத் ததுவாய் மேவுதலே-கள்ளவிழ்பூங
கொத்தார் விரிசடையார் கூறுஞ்சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத்தேர். (முத்திநிச்சயம்)

596. தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கராவார் கோ
லோசதுர, ரந்தமொன்றில் லாவானந்தம் பெற்றே னியாது
நீ பெற்ற தொன்றெனபாற், சிந்தையே கோயில்கொண்டவெ
ம்பெருமான்றிருப் பெருந்துறையுறை சிவனே, எந்தையே
யீசா வுடலிடங் கொண்டா யானிதற் கிலனோர் கைம்மாறே.

597. முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
வத்தனெனக் கருளியவா றூர்பெறுவாரச்சோவே.

598. சீலமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி யறிவின்றித்
தோலின்பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்றுவிழுந்து கிடப்
மாலுங்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறியேறக் [பேனை
கோலங்காட்டி யாண்டானைக் கொடியேனென்றோ கூடுவதே.
(திருவாசகம்)

599. அன்றலர்ந்த பூவின்மது நிறையவாரி
யாவலுடனுண்டவண்டு பூவையல்லால்
நின்றதிலே யுறைகின்றோ மென்பதற்கு மயங்கு
நிலைபோலப் போதவிகாரங்கணீங்கிச்
சென்றுதெளி வுற்றவச முற்றந்தப் பொருளிற்
சேர்ந்தபோ துணைவிழுங்குந்திரும்பவிடாதிதுவே
நின்றபரமானந்த மேலீடாமந்த
நிலைநின்றோர் சாயுச்சிய நிலையினரோ. (முத்திநெறி)

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெ லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீரவே. (தேவாரம்)

சித்தாந்தஞானரத்நாவளி முற்றிற்று.

---

மெய்கண்ட தேவன் றிருவடிவாழ்க.

உ

# சைவசித்தாந்தம்.

## *பதிபசுபாசத்தொகை.

—:o:—

### குறள்வெண்பா.

#### விநாயகர் வணக்கம்.

பவளநிறத் தானைமுகன் பாத நினைப்பா
மவளமறுப் பானெம் மகம்.

இது ஆகமங்களில் ஞானபாதத்தின்கண் கூறப்பெற்ற பொருள்களின் உண்மையை, முத்தி யவாவினர்க்கு எளிதிலறிவுறுத்தற்பொருட்டுக் கருணை மேலீட்டினாற் கூறப்புகுந்த இந்நூலாசிரியர், எடுத்துக்கொண்ட விஷயம் இனிது முடிதற்பொருட்டு, விக்கினங்களை நீக்கவல்ல விநாயகக்கடவுளை வணங்கும் வணக்கம் உணர்த்துகின்றது.

(பதவுரை) பவள நிறத்தானைமுகன் - செம்பவள நிறம் என்ன ஒளிர்கின்ற திருமேனியையுடைய ஆனைமுகப்பிள்ளையாரது, பாதம் - சீபாதங்களை எம் அகம் - அநாதியே எம்மைப் பந்தித்த ஆணவ மலத்தினா லுண்டாம், அவளமறுப்பான் - துன்பமாகிய பிறவியினின்று நீங்குதற்பொருட்டு, நினைப்பாம் - சிந்தித்து வணங்குவாம்.

பிறவித்துன்பத்தை நீக்கவல்ல தாளுக்கு இந்நூல் இடையூறின்றி இனிது முடிவுபெறச் செய்தல் ஓர் அருமையன்று என்பது கருத்து. "எம்மகம் அவளமறுப்பான்" என்பதற்கு எம்மனத்தின் கண்ணுள்ள மலக்கோணை யறுத்தற்பொருட்டு என்று பொருள் கூறினும் பொருந்தும்.

ஈண்டு விநாயகனை ஆனைமுகனென்றெடுத்தோதியது அவன் அத்திருவதனத்தால், தேவர்களது இடுக்கண் தீர்த்த பெற்றி நோக்கி யென்க.

கிரியாசத்தி, ஞானசத்தி ஆகிய இவ்விரண்டும் மூத்தபிள்ளையாரது இரண்டு திருவடிகளென்று மேலோர் கூறுவர்.

அகம் - ஆணவம், நெஞ்சம். அவலம் அவளமென எதுகை நோக்கி நின்றது. அவலம் - துன்பம்.

---

* இஃது பழமையாகிய சித்தாந்த நூல்களில் ஒன்று. இந்நூல் ஏட்டுப்பிரதியிலுள்ளது. சைவசித்தாந்தம் இனையதென யாவர்க்குந் தெரிவிக்கவேண்டி இதனை இங்கு பிரசுரிக்கலாயினோம்.

## பாயிரம்.

### சிவவணக்கம்.

சிவனை நிரஞ்சனனைச் சின்மயனைச் சீவ
பவமுமறுப் பானைநினைப் பாம்.

இது மங்கல வாழ்த்துரைத்தலை உணர்த்துகின்றது.

(பதவுரை) சிவனை - நித்தியமங்கள சொரூபனாகியும், நிரஞ்சனனை - நின்மலனாகியும், சின்மயனை - ஞானமூர்த்தியாயும், சீவன் - ஆன்மாக்களுடைய, பவமுமறுப்பானை - பிறவித் தொடர்ச்சிக் கேதுவாகிய கன்மங்களையு நீக்கவல்லானாகியு முள்ள சிவபெருமானை ; நினைப்பாம் - சிந்தித்துப் போற்றுவாம்.

இது மூவகை வாழ்த்துள், பொருளியல்பு உரைத்ததெனக் கொள்க. என்னை ? இந்நூலுள் முதற்கண் பதியியல் கூறியிருத்தலால் "சிவனை நிரஞ்சனனைச் சின்மயனை" என்றும், பின்னர் பசுவியல் கூறியிருத்தலால் "சீவன்" என்றும், அதன்பின் பாசவியல் கூறியிருத்தலால் "பவம்" என்றும், இறுதியில் அநுக்கிரகவியல் கூறியிருத்தலால் "அறுப்பானை" என்றும் முறையே இம்மங்கல வாழ்த்துள் உய்த்துணரவைத்தமை கண்டு தெளிக.

நிட்களமுஞ் சகளமுமல்லாததாய் தத்துவாதீதமாய் மலரகிதமாய் அநாதி நித்தியமாய் அகண்டிதமாய் அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய் ஆநந்தவுருவாய் ஆன்மாக்களெல்லாஞ் சென்றடையப்படும் பேருய் விளங்கி நிற்பதெதுவோ அது சிவம் என்றறிக. பவமும் என்ற உம்மை, எஞ்சிநின்ற ஆணவத்தையும் மாயையையுஞ் சுட்டிநின்றது.

### சத்திவணக்கம்.

இரவிக் கொளிபோ லிறையொடுறை வாளைப்
பரவிப் பணிவாம் பதம்.

இது அச்சிவனோடு தாதான்மியப்பட்ட சத்திவணக்க முணர்த்துகின்றது

(பதவுரை) இரவிக்கொளிபோல் - சூரியனினின்றும் அவனது கிரணம் எப்படி வேருகாதோ அப்படிப்போல, இறையொடுறைவாளை - சிவபிரானொடு அபின்னையாய்ப் பிரகாசிக்கும் பேரொளியாகிய பராசத்தியை, பரவி - துதித்து, பதம் பணிவாம் - அவளது திருவடிகளை வணங்குவாம்.

இப்பராசத்தியின் சொரூபம் ஞானமாய் நிஷ்களமாயிருக்கும் ; அவள் தொழில் வேறுபாட்டால் திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனப் பலபெயர் பெற்று நிற்பள்.

கிருத்தியத்தைத்திருவுள்ளத்தடைப்பது பராசத்தி. ஆன்மாக்களுக்குப் பெத்தத்திற்பாகம் வருவித்து முத்தியினும் வியாபிப்பது திரோதானசத்தி. மலத்தை நீக்கிச் சிவத்துவத்தை அளிக்கவேண்டுமென்ற கருணையே இச்சா சத்தி. சிவத்துவத்தை யளித்தற்கு வேண்டிய உபாயமெல்லாம் உணர்த்து வது ஞானசத்தி. அவ்வுபாயத்தின்வழி நடத்துவது கிரியாசத்தி.

இச்சத்திகள் இறைவனது ஆணைவழியினின்று பஞ்சகிருத்தியங்களைச் செய்வனவாம். அதனால் இறைவன் விகாரியலன். அது சூரியனது கிரண ங்கள் தாமரை அலரவும் சலம்வற்றவும் காந்தக்கல் கனல்கக்கவுஞ் செய்த போதினும், சூரியன் தாக்கற்று நிர்விகாரியாய் இருத்தல்போல் என்க.

## நந்தி முதலியோர் வணக்கம்.

நந்திபத நந்திமா காளரெழு வாயாவர்
தந்திருத்தா ளும்பணிவாஞ் சார்ந்து.

இது குருவணக்க முணர்த்துகின்றது.

(பதவுரை) நந்திபதம் - சிவகணங்களுக்குத் தலைவராகிய திருநந்தி தேவரது திருவடிகளையும், நந்திமாகாளர் எழுவாயாவர் தந்திருத்தாளும் - நந்திமாகாளர் முதலாகவுள்ள எழுவர் யாவரோ அவர்கள் திருவடிகளையும், சார்ந்து பணிவாம் - மனத்தின்கண் தியானித்து வணங்குவாம்.

சிலாதரர் புத்திரராகிய திருநந்திதேவர் உருத்திரசமக தியானத்தினா லே அருள்பெற்று யாவருக்கும் ஞானகுருவாய் எம்பிரான் திருமுன் நிற்கும் பெரும்பேறெய்தினர். இவரினின்றும் மற்றைய குருசந்தானம் வந்தமையை உண்மை நூல்களா லுணர்க.

நந்திமாகாளர் முதலியோரும் சிவகணத்தலைவராவார்கள். அவர்கள் நந்திமஹாகாளர், பிருங்கி, இடபம், கந்தர், சண்டன், விநாயகர், பார்வதி என்னும் எழுவர்களாம்.

உம்மை எண்ணின்கண் நின்றது.

பதிபசு பாசந் தொகுத்துப் பகர்வா
மெதுகதியென் பார்க்கெளிதி லே.

இது பாயிரத்தின் பொதுவிலக்கண முணர்த்துகின்றது.

(பதவுரை) எது கதியென்பார்க்கு - பரமுத்தி எய்துதற்கு (எதுவோ உண்மைமார்க்கமென்று அறிய) அவாவுறும் உத்தமர்க்கு, பதி பசு பாசம் - சிவாகமத்தில் விரிந்தெடுத்தோதிய ஞானபாதத்திற் கூறப்பெற்ற திரிபதார் த்த இயல்பை, தொகுத்து எளிதில் பகர்வாம் - தொகுத்துச் சுட்டலென் னும் உத்திகொண்டு (தமிழில்) இலேசான முறையிலமைத்துக் கூறுவாம்.

"பதிபசுபாசந் தொகுத்து" எனவே, நூலினது பெயரும், நூல்யாப்பும், நுதலியபொருளும், நூல்வந்தவழியும். "எது கதி யென்பார்க்கு" எனவே காரணமும் கேட்டற்குரிய அதிகாரியும் பயனும் விளங்க உணர்த்துதலை யறிக.

தமிழ்வழங்கு மெல்லையே எல்லையாம்.

"எளிதிற் பகர்வாம்" என்றமையால் வகைவிரியா லெடுத்தோதிய வல்லார்போற் கூறுதற்கு வலியிலேனாயினும், அவரது கருத்தைப்பற்றியே சுருங்கிய இக்குறளடியாற் றொகுத்துக் கூறுகின்றேன் என்னுங் கருத்தால் அவையடக்கமும் உய்த்துணர வைத்ததறிக.

பதி - தலைவன், நாயகன். பசு - பாசத்தளையிற் கட்டுண்ட ஆன்மா. பாசம் ஆன்மாவைப் பந்தித்த பிணிப்பு. கதி - மோக்ஷம், புகலிடம்.

பாயிர முற்றிற்று. ஆகச்செய்யுள் 5.

## நூல்.

### முதலாவது பதியியல்

"பல்லுயிர்க்கு மேக னமலன் சிவன்பதியப்
பல்லுயிரு மீசன் பதி.

இது பரமனது குணங்களுள், அவன் தன்வயத்தனா யிருத்தலை யுணர்த்துகின்றது.

(பதவுரை) ஏகன் - முழுமுதலாயும், அமலன் - அநாதியே மலமுத்தனாயுமுள்ள, சிவன் - சிவபெருமான், பல்லுயிர்க்கும் எண்ணிறந்த ஆன்மாக்களுக்கும், பதி - நாயகனும், அப்பல்லுயிரும் - அவ்வெண்ணிறந்த ஆன்மாக்களும், ஈசன் - இறைவனுக்கு, பதி - தங்குமிடமாம். (எ-று)

சிவபெருமான் ஒப்பாரு மிக்காருமின்றித் தன்னந்தனியனாய் இருத்தல் பற்றி "ஏகன்" என்றும், ஆன்மாக்களைப்போல மலபெத்தனின்றி மலமுத்தனாயிருத்தலால் "அமலன்" என்றும் ஈண்டுக் கூறப்பட்டது.

ஈண்டு பல்லுயிரென்றது விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூன்றுவகை உயிர்த்தொகைகளை என்க. அவைகள் ஈசன்வதியும் பதியாவதெங்ஙனம்? என்னில் இறைவன் சர்வவியாபியாயிருத்தலால், ஆன்மாக்களின் உள்ளும் புறம்புந்தங்கிக்கற்போனாயினும், அவன் இயக்கி அறிவித்தவழி நின்று நடப்பது ஆன்மசத்தியாதல்பற்றி உயிர்களின்மேல்மாத்திரம் ஏற்றிக் கூறினார்.

மலமுத்தன் - இயற்கையிலேயே மலசம்பந்தமில்லாதவன்; மலபெத்தன் - மலத்தோடு பந்திக்கப்பட்டவன்; விஞ்ஞானகலர் - ஆணவமல மாத்

திரமுடையார்; பிரளயாகலர் - ஆணவம், கன்மம், என்னுமிருமலமுடை யார். சகலர் ஆணவம், கன்மம், மாயை என்னும்மும்மலமுடையார்; ஈசன் - எப்பொருட்கு மிறைவன்.

நிராதாரதீக்ஷையால் விசிட்டமான சிவஞானமுதயமாய்ச் சிவாநுபவம் பெற்று சர்வ சங்கார காலத்தில் மந்திரதேகத்தைவிட்டுச் சிவத்துடன் இரண்டறக்கூடுதலால் விஞ்ஞானகலரென அழைக்கப்பெறுவர். பிரளயமாகிய சர்வ சங்காரகாலத்தில் புரியட்டக தேகத்தைவிட்டுச் சிவாநுபூதியடைபவர்கள் பிரளயாகலர். சகலர் - கலாசகிதர், ஸ்தூலதேகமுடையவர். இவர்கள் இருவினையொப்பு வரதபின் சத்திநிபாதமுற்று குருவினால் மோக்ஷமுறுவர்.

"உடலொலியின் மூல வொலியுறைதல் போலக்
கடவுளுயிர் தோறு முறுங் காண்"

இது சிவன் எங்கும் வியாபகனா யிருத்தலை உணர்த்துகின்றது.

(பதவுரை) மூலவொலி - அகரவொலிவடிவெழுத்து, உடலொலியில் - மெய்யொலிவடி வெழுத்தில், உறைதல்போல் - தங்கிநிற்குந்தன்மைபோல, கடவுள் - இறைவனும், உயிர்தோறும் - ஆன்மாக்கள் தோறும், உறும் - பொருந்தி நிலைபெறுவன்.

எவ்வெழுத்தும் உச்சரிக்கப்படுங்கால், அகர வொலியே முதற்கண்ணின்று அவ்வெழுத்துக்களை இயக்கி ஒலிப்பிக்குந் தன்மைபற்றி "மூலவொலி" என்று கூறினர்.

மெய்யொலிகள் உயிர்த்துணையாய்ப் பிறக்குமேயன்றித் தாமேதனித்துப் பிறக்கும் வன்மையுடையனவல்ல ஆதலால் "உடலொலி" என்றார்.

ஒற்றொலியைக் கண்ணொளிக்கும், உயிரொலியைக் கதிரவன் ஒளிக்கும் சமப்படுத்திக் கூறுவர்.

எழுத்துக்கள் தோறும் அகரஞ்சென்றிருத்தல்போல் ஆன்மாக்கள்தோறுஞ் சிவன் வியாபித்திருப்பன். அகரமின்றி எழுத்துக்கள் இயங்காத்தன்மைபோல், இறைவனையின்றி ஆன்மாக்களும் இயங்கா. அகரம் எழுத்துக்களுக்கெல்லா முதலாயினாற்போல் இறைவனும் ஆன்மாக்களுக்கெல்லா முதல்வனாவன். அகரந்தனித்தும், மெய்யோடுகூடியும் இயங்குதல்போல், இறைவன் ஆன்மாக்களுக்குடனாயும் வேறாயும்நிற்பன். மற்றவை ஈண்டுவிரிப்பிற் பெருகும்.

இஃது ஒருபுடையுவமை. காண் - அசை. உறும் - படர்க்கை ஒருமை வினைமுற்று.

"ஆதாரம் வேர்மரத்துக் கீச னனைத்துயிர்க்கு
மாதாரம் வேர்க்குமர மன்று"

இது இறைவனது சருவ காரணத்துவம் உணர்த்துகின்றது.

(பதவுரை) மரத்திற்கு ஆதாரம்வேர் - மரத்தை நிலைநிறுத்தி வளர்ப்பதற்குக் காரணமாயிருப்பதுவேராம், ஈசன் அனைத்துயிர்க்கும் ஆதாரம் - (அதுபோல) சகல புவனங்களிலும் வினைக்கீடாய்த் தோன்றிச் சஞ்சரிக்கும் ஆன்மாக்களுக்கெல்லாம் பரமசிவமே ஓர்களை கண்ணுவன், வேர்க்கு (ஆதாரம்) மரமன்று - வேரை நிலைநிறுத்தி அதனை ஜீவிக்கச்செய்தற்குக் காரணம் அவ்வேரையே ஆதாரமாகக்கொண்ட மரமன்று; (அதுபோல பஞ்சகிருத்தியங்களையும் சங்கற்பமாத்திரத்தாற் செய்யும் பரமனுக்குப் பிறந்திறந்து உழன்று திரியும் ஆன்மாக்கள் ஆதாரமாகாவாம்) (இது சொல்லெச்சம்)

அநாதி கேவலத்தில் ஆணவமலத்தோடுகூடி அறிவு, இச்சை, செயலற்றுக்கிடந்த ஆன்மாக்களைக் கருணைமேலீட்டினுல் எடுத்துக்கன்மத்திற்கேற்ப தநு, கரண, புவன, போகங்களை அளித்து, பாகம் வருவித்தற்பொருட்டுச் சகலாவஸ்தையில் பலதரம்விட்டு, இருவினை யொப்புவந்தவாறே ஆசாரியமூர்த்தமாய் எழுந்தருளி, தீட்சையால் சஞ்சிதத்தை யொழித்து, ஆகாமியம் ஏருதபடியுங்காட்டி, ஆன்மாவினுடன் அபேதமாய் நின்று தேகத்தோடு பிராரத்துவத்தையும் போக்கி, அழியாப்பேருகிய முத்தி வீட்டின்கண் இருத்தி வாழ்விக்கும் முழுமுதல் அவனே யாதலால், அவன் அனைத்துயிர்க்கும் ஆதாரமானுன் என்று கூறப்பட்டது.

பிந்திய ஆதாரத்தை நடுநிலைத் தீபமாக்கி ஈரிடத்துங் கூட்டுக.

“ஆகஞ் சடங்கா ணணுவறியா திவ்விரண்டின்
யோகஞ் சிவனுலென் றோர்”

இது இறைவன் இயற்கையுணர்வினனுதலை யுணர்த்துகின்றது.

(பதவுரை) ஆகஞ்சடம் - ஆன்மாக்கள் பொருந்துவதற்கான பல்வகைப்பட்ட உடல்களும் அசித்துப்பொருள்களேயாம், அணு அறியாது - மலத்தால் மறைப்புண்ட அற்ப அறிவினனுகிய அவ்வான்மாவும் தானே யாதாமோர் உடலினுட்பொருந்துதற்கு அறியமாட்டாது, இவ்விரண்டின்யோகம்- மாயாகாரியமாகிய உடலையும் சிற்றறிவினனுகிய ஆன்மாவையும் ஒன்றுபடுத்தலாகிய செயல், சிவனுலென்று ஓர் - இயற்கை உணர்வினனுகிய இறைவனுல் என்று அறிவாயாக. (எ-று)

மாயை சடமாதலால் அதன் காரியமாகிய உடலும் சடமேயாம். ஆன்மா சித்தாந்தத்தன்மையில் கடவுளோடு ஒத்த ஜாதியாயிருப்பினும் இறைவனது பேரறிவையும் இவனது சிற்றறிவையும் உற்றுநோக்குங்கால் அவனுக்கு இவன் அசித்தாம். கேவலாவஸ்தையிற்கிடக்கும் ஆன்மாக்கள் கருவிகரணுதிகளோடு கூட்டப்பட்டாலன்றி, அவைகள் மலநீங்கி தம் நிலைமையையும் தலை

வனது நிலைமையையும் அறிந்து உய்யமாட்டாவாதலால், கருணைவள்ளலாகிய கடவுளும் ஆன்மாக்களைத்தேகங்களோடு சம்பந்தப்படுத்துவாராயினன். இவ்வாறு சம்பந்தப்படுத்துவது, புடவையின் அழுக்கை உவர் சாணி முதலியன கொண்டு சுத்தப்படுத்துதல்போ லென்க.

ஆணவமலத்தால், ஆன்மா தனது வியாபக அறிவிற் சுருங்கி அணுத்தன்மை எய்தியதால் ஆன்மாவை ஈண்டு அணுவென்றுகூறப்பட்டது. ஆகம்-தேகம், யோகம் - சேர்க்கை.

இக்குறள் தேகத்துக்கு அந்நியமான ஆன்மாவினது உண்மையையும், அவ்வான்மாவைப் பிரேரித்தற்குரிய ஓர் கடவுளது உண்மையையும், அறிவுறுத்துகின்றது, காண் - அசை.

"கருமஞ் சடம்பலத்தைக் காட்டாது காட்டு
நிருமலனென் றேநீ நினை"

இது இறைவன் பாசங்களினின்று நீங்கி யிருத்தலை புணர்த்துகின்றது.

(பதவுரை) கருமம் - கன்மமலம், சடம் - அசித்தேயாம், பலத்தை - அதனால் ஆன்மாக்கள் அடையவேண்டிய இன்பதுன்பங்களை, காட்டாது - அக்கன்மம் தானே இயைந்து அநுபவிக்குமாறு செய்யாது, நின்மலன் - மலரகிதனாகிய பரமனும், காட்டுமென்றே நீநினை - ஆன்மாக்களுடன் பொருத்துவிப்பானென்று நீநினைப்பாயாக.

ஆன்மாக்களாற் செய்யப்படும் நல்வினை, தீவினைகளை ஸ்தூலகன்மமென்றும், இவ்விருவினைகளுக்கும் பலனாய்வரும் புண்ணியபாவங்களை சூக்குமகன்மமென்றும், இப்புண்ணியபாவங்களுக்குப் பலனாய் வரும் இன்பதுன்பங்களை அதிசூக்கும கன்மமென்றும் உண்மை நூல்கள் கூறுகின்றன.

இவைகள் முறையே ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவமென்று அழைக்கப்பெறுவனவாம். இவைகள் நெல்விளைவித்து களஞ்சியத்திற் சேர்த்து, பின் கொஞ்சம், கொஞ்சம் எடுத்துப் புசித்தற்கு ஒப்பன. இவைகள் வன்மை, மென்மை என இருதிறப்பட்டு நிற்பனவாம். இவைகள் முன்பு ஆர்ச்சித்த ஒழுங்கிலேயாயினும், முறைமாறியேயாயினும் ஆன்மாக்களைவந்து பொருந்துவனவாம்- ஜாதி, ஆயுள் போகம், ஜனன மரண முதலியவைகளுக்குக் காரணமும் இவைகளே. நல்வினை தீவினைகளுள் ஒன்றற்கொன்று ஈடாகமாட்டாது. யாவும் அநுபவித்தேதீரவேண்டும். முன்னற்கூறிய பிராரத்துவ கன்மம், தெய்வத்தால் வரும் ஆதிதெய்வீகம், பஞ்சபூதங்களினால்வரும் ஆதிபௌதீகம், பிறவுயிர்களால்வரும் ஆதிஆன்மீகம் என முத்திறப்பட்டுநிற்கும்.

மலபெத்தர்களாகிய ஆன்மாக்களைப் பக்குவமடைவித்தற்கு மலமுத்தனாகிய ஒருவனாற் கூடுமாதலால் ஈண்டு இறைவனை நிர்மலனென்று கூறினர்.

இச்செய்யுளினால் கன்மவாதியை மறுத்தவாறாயிற்று. ஆகப்பாயிரமுள் படச்செய்யுள் (10)

"சடமாயை தானே சமையா தனுவுங்
கடவுடரு வான்வினையைக் கண்டு"

இது இறைவனது சருவஞ்ஞத்துவத்தை உணர்த்துகின்றது.

(பதவுரை) மாயை - மாயாமலமானது; சடம் - அசித்துப்பொருள்; தனுவும் - அம்மாயையை முதற்காரணமாய்க்கொண்ட உருவமும்; தானே - இயல்பாக; சமையா - உண்டாகமாட்டாது; வினையைக்கண்டு - ஆன்மாக்களின் கன்மத்திற்கேற்ப அறிந்து; கடவுள் - சருவஞ்ஞனாகிய பரமனும்; தருவன் - ஆன்மாக்களுக்குத் தேகங்களைக் கொடுப்பன். (எ-று)

ஜனனமரண சாகரங்களில் விழுந்து தத்தளித்துவரும் இவ்வான்மாவைப் பக்குவமுறுவித்து முத்திவீட்டின்கண் இருத்துங் கருணைமேலீட்டினாலே, ஆன்மாவிற்கு இன்னவினையை முன்னும், இன்னவினையை அதன்பின்னும் சோபானமுறையாய்க் கூட்டிவைத்தால் அவ்வான்மா பக்குவமுறும் என்று அறியுஞ்சக்தி முற்றறிவன் ஒருவனுக்கே சாலும் என்பதை இது தெரிக்கின்றது. வினையை அநுபவிக்கச்செய்தல் அவ்வான்மாவைத் தேகத்தோடு கூட்டினாலன்றி முடியாதாதலால் முதற்காரணமாகிய மாயையினின்றும், இறைவனும் குலாலனைப்போல் உருவமைப்பானாயினன். மேலும் அம்மாயை நித்தமாய், அருவாய் உள்ளது. சருவசங்காரகாலத்தில் இவ்வுலகெல்லாம் அதனிடத்தொடுங்கி, மீண்டும் அதினின்றும் புனருற்பவமுறும். இது ஆன்மாவிற்குச் சிறிது அறிவை விளக்கும். இது சுத்தமாயை, சுத்தாசுத்தமாயை, அசுத்தமாயை என முத்திறப்பட்டுநிற்கும். இவைகளினின்றும் ஆன்மதத்துவம் 24-ம் வித்தியாதத்துவம் எழும், சிவதத்துவம் ஐந்தும் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களும் உண்டாம். மீண்டுந் தோற்றியவாறே ஒடுங்கும். இதன் பரப்பையெல்லாம் சித்தியார் முதலிய உண்மைநூல்களுள் உணர்ந்துகொள்க.

"வருத்திய னல்லன் மருத்துவனோ யர்க்கு
நிருத்தனையிவ் வாறுநினை நீ"

இது இறைவனது பேரருளை உணர்த்துகின்றது.

(பதவுரை) நோயர்க்கு - பிணியாளருக்கு, மருத்துவன் - சிகிச்சைசெய்யும் வைத்தியன், வருத்தியனல்லன் - துன்பப்படுத்தினவனாகமாட்டான், நிருத்தனை - பஞ்சகிருத்தியங்களைச் செய்யுஞ் சிவபிரானை, இவ்வாறு - மேற்கூறிய வைத்தியனைப்போலவே, நினை - எண்ணுவாயாக. (எ-று)

இவ்வுலகத்தின் கண்ணுள்ள மருத்துவர் சூரியாடுதல் ஔடதப்பிரயோகஞ்செய்தல் முதலியவைகளால் சிலவியாதிகளையும், மருந்துடன் சருக்கரை

சேர்த்துக்கொடுத்துச் சகலவியாதிகளையுந்தீர்ப்பர். அதுபோல இறைவனும் ஆணவமலநோயால் வருந்தும் ஆன்மாக்களைத் தமது திரோதான சத்தியால் பக்குவம் வருவித்தற்பொருட்டு, அவைகளுக்கு இன்பதுன்பங்களை நுகர்விப்பன். நிரயத்துமிடுவன். இது வைத்தியநாதனாகிய சிவபெருமான் உயிர்கள் மாட்டுவைத்த கருணையின் நிகழ்ச்சியே யன்றி வேறன்று.

வருத்தியன் - தொழிலால் வரு பெயர்.

"உதவி யிரவி யுலகுக் கிரவிக்
குதவி செயுமோ வுலகு"

இது இறைவனது முடிவிலாற்றலை உணர்த்துகின்றது.

(பதவுரை) உலகுக்கு - இப்பிரபஞ்சத்திற்கு; இரவி - சூரியன், உதவி- பிரயோஜனகரமாய்ப் பொருந்துவன், இரவிக்கு அப்படிப் பயனுறுவிக்குஞ் சூரியனுக்கு, உலகு - இவ்வுலகமானது, உதவிசெயுமோ - கைமாறாகிய பிரயோஜனத்தைச் செய்யத்தக்கதோ? செய்யும் ஆற்றலுடையதன்று. (எ-று)

இவ்வுலகத்தின் கண்ணே துன்னிய புறவிருள் கெடும்படி தோன்றி, ஆன்மாக்களையெல்லாந் தத்தம் செயல்களில் நிறுத்தி நுகர்வித்தற்கு ஓர் காரணமாயுள்ள சூரியனுக்கு இவ்வுலகம் எவ்வாற்றானுங் கைமாறளித்தற் கியலாத்தன்மைபோல, அஞ்ஞானத்தை விளைவிக்கும் ஆணவமலசத்தியைத் திருவருளாற் கெடுத்துப் பேரின்பமாகிய சிவாநுபவத்தை விளைவிக்கும் ஞானசூரியனாகிய முதல்வனுக்கு, தோன்றிநின்று அழியுந்தன்மையதான மாயா தேகத்திற் கட்டுண்ட அற்ப அறிவுடைய இவ்வான்மாக்கள் செய்தற்குரிய கைமாறென்னை? ஒன்றுமின்று. இறைவனும் "வேண்டல், வேண்டாமை" என்னும் தன்மைகளை உடையனல்லாத விழுச்செல்வனாதலால் அவன் ஆன்மாக்களின் உதவியை எதிர்பார்த்து நிற்றற்கோர் இயைபின்மையு மறிக.

ஓகாரம் ஈண்டு எதிர்மறைக்கண் வந்தது.

**பதியியல் முற்றிற்று ஆகச்செய்யுள் (13).**

---

## இரண்டாவது பசுவியல்.

முறையானே முதற்கண் பதியியல்கூறிப் பின்னர் பசுவியல் கூறுகின்றார்.

"ஆகஞ் சடந்தா னியங்கா ததனையா
பாசன் பசுப்பலந்துய்ப் பான்.

இது பசுவினது உண்மை யுணர்த்துகின்றது.

(பதவுரை) ஆகம் - தேகமானது, சடம் - அசித்துப்பொருள், தான் இயங்காது - (ஆதலால் அவ்வுடல்) தானே தொழிற்படாது; அதனை - அவ்

வுடலைப் பொருந்திநின்று, ஆபாசன்பசு - திறக்கேடனாகிய ஆன்மா, பலந் துய்ப்பான் - இன்பதுன்பங்களை அநுபவிப்பான். (எ-று)

பஞ்சபூதங்களுஞ் சடமாகையால் அவைகளின் சேர்க்கையாலாகிய தேகமுஞ் சடமேயாயிற்று. சடப்பொருள்கள் தாமே இயங்கும் வன்மையின்றி இயக்குவித்தால் இயங்கும் வன்மையுடையன. ஆகவே, இவ்வுடல் இயங்குகின்றமையானும், இச்சாஞானக்கிரியை அதன்கண்நிகழ்தலானும், அதனுள் நின்று இயக்குவான் ஒருவன் உளன். அவனே ஆன்மா. அவனை இவ்வுடலின்கண் பொருத்தியது, இன்பதுன்பமென்னும் இருவினைகளையும் நுகர்வித்துப் பக்குவம் உறுவித்தற்கேயாம். ஆதலால் அங்ஙனம் நுகர்வானாயினன்.

ஆபாசன் - போலித்தன்மையுடையோன், திறக்கேடன்.

> "பொறியு முயிரல்ல பொறையுடலு மல்ல
> வறிவே யுயிரென் றறி"

இது பசுவின் தன்மையை உணர்த்துகின்றது.

(பதவுரை) பொறியுமுயிரல்ல - ஐம்பொறிகளும் ஆன்மா வாகா, பொறையுடலு மல்ல - உயிர்தாங்கிச் செல்லுதற்குரிய தேகமும் உயிராகாது, (ஆதலால்) அறிவே தேகத்தின்கண்ணின்று பொறிவழியால் ஐம்புலன்களையும் அறியும்அறிவே, உயிரென்று-ஆன்மாவென்று, அறி-அறிவாயாக. (எ-று)

ஐம்பொறிகளுள், ஒன்றறிந்தபின் ஒன்றறியும். ஒன்றறிந்ததை யொன்றறியாது. ஆகையால் இவ்வைந்தையுங் கருவியாகக்கொண்டு, ஞானம் கிரியை இச்சை இவைகளோடு பொருந்தி அறிவது எதுவோ அதுவே ஆன்மாவன்றி, ஏனயபொறிகளல்ல வென்று உணர்த்தும்பொருட்டு "பொறியுமுயிரல்ல" என்றார்.

இவ்வுடல் சவமானபோது அவயவங்களிற் குறைபாடின்றிக் கிடந்தும் அதில் அறிவு நிகழாமையால் அதுவும் உயிரன்று, எனக்கூறினர். பொறி ஐந்து:-மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவைகளே' புலன் ஐந்துஃ-சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்பவைகளே. இனம்பற்றி அந்தக்கரணம், பிராணவாயு முதலியவைகளும் உயிரல்லவெனக் கொள்ளப்படும்.

> "உறக்கத் துணரா வுடலும் பொறியு
> முறக்கமு மோரு முயிர்"

இது ஆன்மா அவத்தைக்கண்ணும் அறியுமென உணர்த்துகின்றது.

(பதவுரை] உடலும் - தேகமும், பொறியும் - ஐம்பொறிகளும், உறக்கத்து - நித்திரையில், உணரா - அறியும் வலியுடையனவல்ல, (ஆனல்) உயிர் - ஆன்மா, உறக்கமும் - நித்திரையையும், ஓரும் - அறியும். (எ-று)

"உறக்கமும் ஒருமுயிர்" என்றது விழித்தபின் சுகமாய்த்தூங்கினதான உணர்வு நிகழ்தலைப்பற்றி யென்க. உடலின்கண் யாதொரு குறைபாடுமின் றிக் கிடக்கும் உறக்கத்தின் மூர்க்கப்பாம்பு அவ்வுடலின் மேலேறியு மதனை யறியாத்தன்மையால், அவ்வுடல் உணருந் தன்மையதன்று. நித்திரையின் கண் உடலினிடத்தே ஐம்பொறிகள் பொருந்தி நின்றும் அவைகள் அறியாத் தன்மையால் "உறக்கத்துணரா பொறியும்" என்றார்.

அவத்தை - நிலைமை, அது ஐந்துவகைப்படும். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. இவ் வவத்தையின் விரிவைச் சித் தியாருட் கண்டுணர்க,

> "புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணியபா வத்தானு
> நண்ணுமுயிர் மேல்கீழ் நடு"

இஃது ஆன்மா செய்யும் வினை நுகர்தற்கு அடையும் உலகம் உணர்த்து கின்றது.

(பதவுரை) உயிர் - ஆன்மாவானது, புண்ணியத்தால் - சற்கருமப்பய னால், மேல் நண்ணும் - சுவர்க்கலோகத்தை யடையும், பாவத்தால் - அசற் கருமப்பயனால், கீழ்நண்ணும் - நரகத்திற்சேரும், புண்ணியபாவத்தாலும் - நல்வினை தீவினையின்பயனாகிய புண்ணியபாவமென்னும் இருதொடர்பாலும் நடுநண்ணும் - நடுநின்றதாகிய இவ்வுலகத்தைப் பொருந்தும். (எ-று)

வேதாகமம் விதித்தன செய்தலும், விலக்கியன செய்யாதொழிதலுமே புண்ணியம். இவற்றின் மறுதலையே பாவம். குறித்தகாலம் வரை இன்ப துன்பம் அநுபவித்தற்குரிய இவ்வுலகத்தை யாம் காண்கையால் அவ்வாறு இன்பமே அநுபவித்தற்குரிய சுவர்க்கமும், துன்பமே அநுபவித்தற் குரிய நிரையமும் உண்டெனை அநுமிக்கப்படும். நல்வினை தீவினைகள் முறையே பொன்விலங்கு, இருப்புவிலங்குகளுக்குச் சமம் என்றும், சுவர்க்க நரகம் கா ராக்கிருகத்துக்குச் சமமென்றும் உண்மைநூல்கள்கூறுகின்றன. இவைகளின் நுகர்ச்சி நுகர்ந்தவாறே மீண்டும் பிறத்தல்வேண்டும். உண்மை ஞானமுடை யோர் சுவர்க்கபதவியையும் மற்றைய மேலான பதவிகளையும் விரும்பாது என்றும் மீளா முத்தியையே எய்தத்தலைப்படுவர்.

பசுவியல் முற்றிற்று ஆகச்செய்யுள் [17]

---

## மூன்றாவது பாசவியல்.

முறையானே பாசவியல் கூறுகின்றார்.

> "யானென் செருக்கா லிருவினையா மச்செருக்கு
> மூனமலத் தானு முயிர்க்கு"

இது ஆணவமலத்தின் உண்மை கூறுகின்றது.

இ-ள். உயிர்க்கு - ஆன்மாவிற்கு, யானென் செருக்கால் - நான் என்று சொல்லுந் தருக்கினால், இருவினையாம் - நல்வினை தீவினைகளுண்டாம், அச் செருக்கும் - அத்தருக்கும், ஊனமலத்தால் ஆம் - கேட்டை விளைத்தற்குரிய ஆணவமலத்தினால் உண்டாம் (எ-று)

ஆநாதியே ஆன்மாவைப் பந்தித்துள்ள இவ்வாணவமலம் ஓர்சடவஸ்து. விஷம், கள் முதலியன ஆன்மாவைமயக்குவதுபோல், இதுவும் அதனை மயக்கும். கடவுள் இவ்வாணவமலத்தைத் தமது திரோதான சத்தியால் சேட்டிக்கின்றார். இது ஆன்மாவினுடைய இச்சாஞானக்கிரியைகளை மிக மறைத்து நின்று அநேக விகாரங்களைச் செய்யும். இது ஆன்மாவினுடன் அபேதமாய் நின்று அதனைக் கேவல நிலையில் நிறுத்தும். இது அநுபவமாகிய போகத்தில் இச்சையை விரிவித்து நிற்கும். இது ஆன்மாவிற்குப்பக்குவம் வந்தபோது தன் சத்தியிற் குன்றி நிற்குமேதவிர விட்டு நீங்காது. இது எட்டு முக்கியகுணங்களை யுடையதென உண்மை நூல்கள் கூறுகின்றன.

அவையாவன:—விகற்பம், கற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர் மதம், நகை என்பவைகளே. இக்குணங்களால் யான் என்கின்ற அகங்காரமும், அதனால் வினைகளும், அவ்வினைகளால் இன்பதுன்பங்களும் உண்டாம். இம்மூலமலம் தன்னுருவத்தைக்காட்டாது நின்று ஆன்மஞானத்தின் மேற் படர்ந்து அதனை ஈனமாகிய இடர்க்கடலின்கண் வீழ்த்தி நிற்குந்தன்மையது. ஆதலால் அதை ஊனமலமென்று கூறினார்.

ஊனம் - ஈனம், கேடு, குறைவு.

> " செம்பிற் களிம்பென்னச் சீவனோ டுற்றதிமிர்
> நம்பனைக்காட் டாதுயிரி னன்கு. "

இது ஆணவமலத்தின் முக்கிய தன்மை கூறுகின்றது.

இ-ள். செம்பிற்களிம் பென்ன - செம்பினிடத்தே அநாதி சையோகமாய் நிற்கும் காளிதத்தைப்போல, சீவனோடுற்ற திமிர் - ஆன்மாவினோடு அநாதி சையோகமாய்நிற்கும் இருளாகிய ஆணவமலம், உயிரில் ஆன்ம அறிவில் நம்பனை - தோன்றாத்துணையாய்வியாபித்திருக்கும் இறைவனை, நன்கு காட்டாது - மிகுதியும் அறியுமாறு பிரகாசிப்பிக்கமாட்டாது. (எ-று)

ஒன்றாய் (முற்கூறியாங்கு) எண்ணிறந்த சத்திகளுடன் உயிர்களிடத்து அநாதியே விரவி நின்று பல விகாரங்களைச் செய்வதாயுள்ள ஆணவமலத்திற்கு மறைப்பு ஒன்றே முக்கிய குணம். அது ஆன்மாவுடன் பெத்தமுத்திகளில் நீங்காதே இயைந்து நிற்கும் தலைவனது தன்மையை அப்பிரகாசப் படுத்து மாதலால் " நம்பனை உயிரில் நன்கு காட்டாது " என்றார்.

இனம்பற்றி கன்மம், மாயைகளின் றன்மைகளையும் ஒருசிறிது கூறு வாம்:— கன்மம், மாயை, ஆணவம் இவைகள் மும்மலமென்று அழைக்கப் பெறும். இவைகள்முறையே நெல்லுக்கு முளை தவிடு உமிப்போல் உயிரைப் பொருந்தி நின்று, போகமும் பந்தமும், போத்திருத்துவமும் பண்ணுவன வாம். எப்படியெனில்:—நெல்லின்கண்ணுள்ள முளைத்தற் சத்தி முளையைத் தோற்றுவிக்குமாறு போல உயிரின்கண் சுகதுக்கங்களைத் தோற்றுவித்தல் கன்மமலம் போகம் பண்ணுதலாம். முளைத்தற்கு அநுகூலமாய்க் கூடிநிற் குந் தவிடுபோல அச்சுகதுக்கங்கள் பொருந்திநிற்றற்கு நிலைக்களமாய்த்தன் காரியமாகிய தனு கரணமுதலியவற்றையும், உயிரையும் இயைவித்துநிற்றல் மாயாமலம் பந்தம் பண்ணுதலாம்.

அம்முளை தோன்றுதற்கு நிமித்த காரணமாய் நின்ற உமிப்போல, சுக துக்கங்களுக்கு நிமித்த காரணமாய், அவற்றை முறுகுவித்து உயிர் நுகருமா று நிலைபெறச்செய்தல் ஆணவமலம் போத்திருத்துவம் பண்ணலாம்.

இம்மும்மலங்களைத் தவிர, ஆன்மாவின் அறிவு, இச்சை, செயல்களை ஏகதேசப்படுத்தும் மாயாகாரிய மாகிய மாயேய மலமும், இம்மும்மலங்களை யுந்தத்தம் தொழிற்படுத்திப் பாகம் வருவிக்கும் சிவசத்தியாகிய திரோதான சுரியும் என வேறு இரண்டு மலங்களுமுள. பிறப்பு இறப்பு முதலிய யாவற்றி ற்குங் காரணம் இவ்வைவகை மலங்களாம்.

இவற்றின் பரப்பை யெல்லாம் விரிந்த நூலுட் கண்டுணர்க. இப்பாச வியலுள் ஆணவமலத்தை மாத்திரங்கூறி மற்றைய மலங்களைக் கூறாதுவிடு த்தது, முன் பதியியல் கூறு முகத்தால் "உரைத்தாம்" என்னும் உத்திகொ ண்டு போலும்.

(பாசவியல் முற்றிற்று) ஆகச்செய்யுள் 19.

---

## நான்காவது அநுக்கிரகவியல்.

முறையானே அநுக்கிரகவியல் கூறுகின்றார்

பரிபாக மாகவிருட் பாசமுடை யூனை
யருவருக்கு மாவிவிருப் பற்று.

இது பக்குவம் வருவதற்கு நிகழுங்குறி யுணர்த்துகின்றது.

(இ—ள்) ஆவி—ஆன்மாவானது; பரிபாகமாக—ஈசனது திரோதான சத்தியால் பக்குவம் எய்துதற்கு முற்குறியாய்; இருட்பாசமுடை ஊனை—அஞ்ஞானத்தை விளக்கும் ஆணவமலத்தா லியைந்த அவ்வசுத்த தேகத்தினை விருப்பற்று — அபிமானத்தின் கண்ணின்றுநீங்கி, அருவருக்கும்—அதனை வெறுக்கும் (எ-று).

ஈண்டு மலபரிபாகமெய்துதலே பக்குவம், மலம்—ஆணவமலம்; பரி—உபசர்க்கம்; பாகம்—பக்குவம், அதாவது ஆணவமலம், பக்குவம் எய்துதல். பக்குவம் எய்துதலாவது, அது தன் மறைத்தற்சத்தியிற் குன்றிநின்று மற்றோர் பிறவிக்கு ஏதுவாதலின்றி இருத்தலாம். செம்பை ரச குளிகை பரிசித்தவாறே அதனோடு சம்பந்தமுற்ற களிம்பின்றன்மை மாறிப் பொன்னுருப் பெற்றாற்போல, உயிர் மெய்ஞ்ஞானம் பெற்றுழி அதனோடு சகசமாய்நின்ற ஆணவமலசத்தி குன்றிச் சிவமாந்தன்மை எய்தும். காணுஞ்சத்தியுள்ள கண்ணுக்கே சூரியப்பிரகாசம் பயனுறுமாறு போல், அருட்கண் பெற்றவர்க்கே ஈசன் அறிவிற்கறிவாய் நின்று உபகரிக்கும் உண்மை நிலை விளங்கும். உமி நீங்கிய நெல் முளையாத வாறுபோல, ஆணவமலம் நீங்கிய இவ்வான்மா மீண்டும் பிறத்தற் றொழிலைப் பொருந்தாது. ஆனால் பேரானந்த நிலையாகிய சிவாநுபவமொன்றற்கே சுதந்தரமுடையதாய் அமையும்.

அப்பொழுது தேசிகனை யாவேசித் தேயமல
னப்பழுதை நீக்குமரு ளால்

(இ-ள்) அப்பொழுது—மலபரிபாகம் வந்தவாறே, அமலன்—நின்மலனாகிய இறைவன், தேசிகனை ஆவேசித்து—குருவை அதிட்டித்து நின்று, அருளால்—தனது அருட்சத்தியால், அப்பழுதை நீக்கும்—பிறவித்துன்பத்தை ஒழிக்கும். (எ-று)

பதிபுண்ணிய விசேடத்தால் இருவினையொப்பு வந்து சத்திநிபாதம் பிறந்தவாறே, இறைவனும் மானைக்காட்டி, மானைப்பிடித்தாற்போல, மானிட உருவங்கொண்டு, ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளிவந்து பக்குவம் நோக்கித் தீட்சாவிகற்பங்களிலொன்றால் தீக்ஷித்து, சஞ்சிதத்தைக் கெடுத்து, ஆகாமியம் வருதபடி காட்டித்தேகத்தோடே பிராரத்துவவினையையும் போக்கி அத்துவித நிலையிற்பொருத்துவான். இத்தேசிகன் திருவருளின்றி அடிசேர்ஞானமாகியமெய்ஞ்ஞானம் எவ்வாற்றானும் வந்துறாமையைக் கண்டுணர்க.

தீக்ஷையென்பது மும்மலத்தை வீட்டி முத்தியை விளைவித்தற்குரிய சிவஞானத்தைப் பயப்பிப்பதாம். மலபரிபாகம் பலவகைப்படுதலின் தீக்ஷையும் பலவகைப்படும், அவையாவன சட்சு தீட்சை, பரிச தீட்சை, வாசக தீட்சை, மானத தீட்சை, சாஸ்திர தீட்சை, யோக தீட்சை, ஔத்திரி தீட்சை, என்பவைகளே.

இதன் பரப்பையெல்லாங் குருமுகமாய்க் கேட்டுணர்க. (2)

நீங்கவிரு ணீங்காதே நின்றசிவங் கண்டாவி
யோங்கியபே ரின்பத் துறும்.

இது ஆணவமலம் நீங்கியவாறே ஆன்மா எய்துநிலையுணர்த்துகின்றது.

(இ-ள்) இருள் நீங்க—ஆணவமலமறைப்பினு லுண்டான அஞ்ஞான நீங்க, நீங்காதே நின்றசிவம்—தனக்குத்தோன்றாத் துணையாய்ப்பெத்த முத்திகளினும் வியாபித்து நிற்கும் இறைவனை, ஆவிகண்டு—ஆன்மாவானவன் தன்னுள்ளே அகண்டாகாரப் பேரொளியாய்க் கண்டு, ஓங்கிய பேரின்பத்துறும்—பரமானந்த சாகரத்தின்கண் பொருந்தி யின்பமனுபவிக்கும்.

அநாதி சையோகமாகிய ஆணவமலத்தின் வாதனையுங் கெட்டு நிற்றலே ஈண்டு இருள் நீங்கலாம். ஈசன் பெத்த முத்திகளினும் தோன்றாத்துணையாய் நிற்போனாதலால் "நீங்காதே நின்ற சிவம்" என்று கூறினார், சிவபோகத்துக்குமேலொரு ஆனந்த மின்மையால் "ஓங்கிய பேரின்பமென" விசேடித்தார். மற்றைய பதமுத்திகளெல்லாம் கீழ்நோக்கிப் பார்க்குங்கால் ஒன்றற்கொன்று குறைந்தவைகளேயாம்.

பேரின்பத்தின்கண் ணுறுதலாவது—தாடலை (தாள்-தலை) போலாக அத்துவித நிலையின் கண்ணடங்கி நின்று இன்பமே சொரூபமாகிய சிவபோகத்தில் சுவாநுபவம் எய்தி நிற்றலாம்.

அநுக்கிரகவியல்முற்றிற்று. ஆகச்செய்யுள்—22.

ஆக்கைசிறை என்றமலத் தாதரவுற் றோர்க்கிந்த
வாக்கை யறைக மதித்து.

இந்நூலை எற்றற்குரிய அதிகாரி இவரெனத் தெரிக்கின்றார்

இ—ள். ஆக்கைசிறையென்று—சப்ததாதுக்களால் இணைக்கப்பெற்ற இத்தேகம் ஓர்காராக்கிருகமென்றெண்ணி வெறுத்து, அமலத்து—நின்மலத்துவத்தின் கண்; ஆதரவுற்றோர்க்கு—விருப்பமுடையவர்களுக்கு, இந்த வாக்கை—பதிபசுபாசத் தொகையென்னும் இந்தஞானசாத்திரத்தை, அறைக—சொல்லக்கடவர்கள்.

பக்குவியல்லார்க்கு இதனை உரைத்தல் விழலுக்கிறைத்த நீர்போல, யாதொருபயனும் பயப்பியாது இடர்ப்பாட்டின்கண் வீழ்த்து மாதலால் ஈண்டு இவ்வாறு கூறுவாராயினர். (23)

" விடம்பர்க் குரைத்தார் விழுவர்கீழ் மேலே
யடைந்தார்நல் லார்க்கறிவித் தார்"

இது பக்குவர், பக்குவரல்லாதாராகிய இவர்களுக்கும் அறிவித்தார் எய்தும் பயன் கூறுகின்றது.

இ—ள். விடம்பர்க்கு—துற்சனர்களாகிய அபக்குவிகளுக்கு, உரைத்தார்—சொல்லிய ஆசிரியர், கீழ்வீழ்வர்—நரகத்தின்கண்வீழ்ந்து அழுந்துவர்கள், நல்லார்க்கு—பக்குவமுடையவர்களுக்கு, அறிவித்தார்—சொல்லியருளிய ஆசிரியர், மேலடைந்தார்—சிவலோகத்தை யடைந்தவராவர்.

ஆதலால் ஆசிரியராவார், அபக்குவர்களை, தம்மிடத்துஅன்பும், அவர்களிடத்து அருளுங்கொண்டு தள்ளல் வேண்டும். இன்றேல் இவ்விருவரும் நரகில் வீழ்ந்து அழுந்துவர்கள், அதினின்றும் ஏறல் முடியாதென்று உண்மை நூல்கள் கூறுகின்றன.

“ இந்தவிய லைத்திரிவு மின்றியுணர்ந் தார்க்கிருண்ட
பந்தமறும் வாய்த்துறுமின் பம்”

இது இந்நூலுணர்ந்தார் அடையும் பலன் கூறுகின்றது.

இ—ள். இந்தவியலை—ஞானத்தைக்கூறும் இந்தப்பகுதியை, திரிவுமின்றி—பொருள் வேறுபாடுமின்றி, உணர்ந்தார்க்கு—நன்குய் அறிந்த சாதுக்களுக்கு, இருண்ட பந்தமறும்—அநாதியே தம்மைப் பொருந்திய அஞ்ஞானமாகிய பாசப்பிணிப்பு நீங்கும், இன்பம் வாய்த்துறும்—பேரானந்த அநுபவங்கிட்டும். எ—று

திரிவுமென்ற உம்மையால் சந்தேகமும், அறியாமையுங் கொள்ளப்படும். இவை மூன்றும் முத்திவிக்கினங்களென்று கூறப்பெறும்.

இயல், ஒத்து. பகுதி, என்பன ஒருபொருட் சொற்கள். சுபம். 25

ஆகச்செய்யுள். 25.

பதிபசு பாசத்தொகை முற்றிற்று.

மெய்கண்டதேவன் றிருவடிவாழ்க.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 5 | விளக்குமா | விளங்குமா |
| 5 | 10 | 71 | 17 |
| ,, | 11 | பியம் | பிகம் |
| ,, | 13 | திரோதான மலத்து இறைவனது மறைத்தற் சத்தியையு | திரோதானமலத் (இறைவனது மறைத்தற் சத்தி) தையு |
| ,, | 20 | யைபோ | சரியை கிரியையோ |
| 7 | 17 | விருப்பர்.சிவ | விருப்பர்சிவ |
| 10 | 18 | அனந்தம் | ஆனந்தம் |
| ,, | 21 | ஏ—னே | ஏடணே, இங்ஙனம் வருமிடந்தோறுங் கொள்க |
| ,, | 23 | ஊர்ணம் | வர்னம் |
| ,, | 25 | மயேயம் | மாயேயம் |
| ,, | 32 | பிர்மன் | பிரமன் |
| 12 | 20 | ஆதாரமுத்தி | ஆதாரம் |
| ,, | 24 | பிரசாத | பிராசாத |
| 13 | 14 | சதாக்கியமும் சதா | சாதாக்கியமும் சாதா |
| 14 | 20 | டுதா | டுதா |
| ,, | 31 | கலையிலடங்குவது | கலையில் |
| 15 | 11 | (27)ம் | (2)ம் |
| 16 | 2 | அதனின்று | அதனினின்று |
| 19 | 21 | வான்வை | வான்மாவை |
| ,, | 31 | மூாத்த | மூர்த்த |
| 22 | 19 | 19 | 119 |
| ,, | 30 | இனிஞய | இனியஞகிய |
| 23 | 29 | வினைகூ | வினையைக்கூ |
| 25 | 29 | கி குறை | தி குறை |
| 26 | 27 | வனின் | வனில் |
| 29 | 27 | தாலிஞ | தாதலிஞ |
| 30 | 28 | ஆன்மா | ஆன்ம |
| 31 | 9 | படும். அவையாவன | படுவர். அவர் |
| ,, | 10 | பனவாம் | பவர்களா |
| ,, | 16 | இவர்கள் | இவர்களுக்கு |
| 32 | 6 | வன. காமம் | வன. விகற்பம் கற்பம் |
| ,, | 7 | லோபம், மோகம் மதம்மாச்சரியம் அராகம் | மோகம் மதம் கொலை |
| ,, | 8 | மை எ | மை நகை எ |
| 32 | 24 | 26 | 226 |
| 33 | 30 | ளால்தான் | ளாற்முன் |
| 35 | 26 | நீலம் | நிலம் |
| 38 | 27 | வகை கா | வகைக்கா |
| 45 | 16 | வசிக்சின் | வசிக்கின் |
| 47 | 2 | 388 | 384 |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 47 | 6 | தேன் ஈக் | தேனீக் |
| 47 | 26 | 302 | 392 |
| 48 | 6 | டது அற்ப் | டது உண்மையின் அற்ப் |
| ,, | 16 | செய்யாது | செய்த |
| ,, | 25 | கங்கங்கள் | கங்கள் |
| ,, | 29 | ளததுற | ளத்துற |
| 49 | 6 | டையும | டையும் |
| ,, | 22 | என் | ஏ |
| ,, | 25 | மததிலே | மத்திலே |
| 51 | 2 | மூலமல | மூலமனு |
| ,, | 10 | ஆன்தே | ஆனதே |
| ,, | 30 | வழியைககாட்டிமரம் | வழியைக்கைகாட்டி மரம் |
| 53 | 19 | தீவிரசத் | தீவிரதரசத் |
| ,, | 22 | மனததால் | மனத்தால் |
| ,, | 27 | கூதித்தால் | கூதித்தல் |
| 54 | 4 | துவர் | துபவர் |
| ,, | 14 | சன்பால் | சன்பல |
| 56 | 7 | பூசிகக | பூசிக்க |
| ,, | 14 | கரணம் | காணம் |
| ,, | 21 | பததி | பத்தி |
| 59 | 10 | ஆன்மாப்பி | ஆன்மப்பி |
| ,, | 23 | சித்திகள | சித்திகள் |
| 62 | 8 | ஆமத் | ஓமத் |
| ,, | 30 | புசித்த | பூசித்த் |
| 63 | 22 | சுவ | சுவாகா |
| ,, | 23 | ர்கதாவஷ் | வஷட் |
| 65 | 6 | துவசித்தி | துவசுத்தி |
| ,, | 7 | நீங்கித | நீங்கித் |
| 67 | 3 | னம் | னல் |
| ,, | 19 | சாணும் | காணும் |
| 69 | 5 | கலநத | கலந்த |
| 71 | 8 | பேத | போத |
| 72 | 9 | சிததாங் | சித்தாங் |
| 72 | 12 | றெணபா | றென்பா |
| ,, | 17 | மாககி | மாக்கி |
| ,, | 19 | பின்றி | பீன்றி |

## பதிபசுபாசத்தொகை.

| | | | |
|---|---|---|---|
| 6 | 32 | தாந்தத்த | தாந்த |
| 436 | 6 | ஆனவ | ஆணவ |
| 410 | 17 | கிட்டு | கிட்டும் |